Approved by the Text Book Committee, Madras.

105

BHAKTHI CHANDRIKA NO. 1.

# Sreemathi

OR

# AMBAREESHOPAKHYANAM

# ஸ்ரீமதி

## அம்பரீஷோபாக்யானம்

BY

GAJAMBAL

Author of 'Gnanambal' the Excellent Novel

Fifth Edition—Revised & Enlarged.

K. PALANIANDI PILLAI & Co.,
BOOK SELLERS, PUBLISHERS, etc.
Triplicane, Madras.

 1921 [Price As 2.

துரைத்தனத்தார் அங்கீகரித்தது.

பக்தி சந்திரிகா நே. 1.



# ஸ்ரீமதி

## அம்பரீஷோபாக்கியானம்.

ஞானம்பாள்—என்னும் திவ்ய சரித்திரம் எழுதிய

கஜாம்பாள்

எழுதியது.

திருத்தமான ஐந்தாம் பதிப்பு.

கெ. பழனியாண்டி பிள்ளை கம்பெனி.

திருவல்லிக்கேணி,

சென்னை.

 1921. விலை அணா 0-2-0.

உ

செந்திலாண்டவன்
திருவடி துணை.




# ஸ்ரீ பதி
# அம்பரீஷோபாக்கியானம்.

## அத்தியாயம் 1.

பூர்வம் இக்ஷுவாகு வம்சத்து ...சருள திரிசங்கு என்பவனொருவ ...ரான் ... அவனுக்குப் பத்மாவதி என்றொரு மனைவி இருந்தாள். அவள் நல்ல லக்ஷண முடையவள்; கணவனுக்கு இனியள்; தன்னை வந்து கேட்பவர்களுக்கும் தவிர மற்றும் ஏழை ஜனங்களுக்கும் குறைவற அளிக்கும் தயாள குணமுடையவள். இராஜ ஸம்பத்தை உடையவளாய் இருந்தும் பத்மாவதி தன்னையோர் ஏழையிலும் எளியவளாகவே கருதி நடப்பாள்; பழிபாவங்களுக்குப் பயப்படுவாள்; தன்னலங் கருதி எதையுஞ் செய்யாள். அவள் பொறுமை யென்னும் அருமையான குணத்தையே பூஷணமாகக்கொண்ட உத்தமி. சேஷபரியங்கத்தில் யோக நித்திரை செய்பவரும், புருஷோத்தமரும், காலருத்திரனாகவும், ஸ்ருஷ்டி கர்த்தாவாகவும், விஷ்ணுவாகவும் இருந்து எல்லோராலும்

அம்பரீஷோபாக்கியானம்.

வணங்கப்படுகிறவருமான நாராயண மூர்த்தியை மனம், வாக்கு, காயம் முதலியவைகளால் பூஜித்துப் பக்தி புரிந்துவரும் உத்தம ஸ்திரி ரத்தினமாக விளங்கினள். எப்போதும் இந்தப் பத்மாவதியின் நாவானது "நாராயணா! கோவிந்தா! அச்சுதா! மாதவா!" என்னும் பகவானுடைய நாமங்களை உச்சரித்தவாறே இருக்கும். அவள் பரந்தாமனுடைய அடியவர்களைக் காணின் அவர்களை வணங்கி அவர்கள் விரும்பும் எப்பொருளையும் மகிழ்ச்சியுடன் அளித்து எப்போதும் உபசரித்து வருவாள்.

2. அநேக வருஷகாலம் இவ்விதம் சிறிதும் சலிப்பில்லாமல் பத்மாவதி நடந்து வந்தாள். ஒரு நாள் பத்மாவதி, தானும் தன் கணவனுடன் ஏகாதசி விரதமிருந்து துவாதசியன்று பக்தகோடிகளுக்கு அன்னமளித்துப் பின் உணவு உண்டு பகவானது ஸந்நிதியில் படுத்து நித்திரை செய்தாள். அப்போது பக்தபராதீனனாகிய பரந்தாமன் பத்மாவதியின் கனவிற்றோன்றி "மாதரசே! உன் பக்திக்கு மகிழ்ந்தனன்; நீ விரும்பும் வரமென்ன?" என்றார். அப்போது பத்மாவதி "ஜநார்த்தனா! எனக்குப் பூவுலகத்தில் வேண்டும் வரம் யாது? உனது திருவருளால் எனக்குச் சகல பாக்கியங்களும் உண்டாயிருக்கின்றன. ஆனால் மக்கட்பேறில்லாக் குறையொன்று தான் வெகுநாளாக என்னை வருத்துகின்றது. எங்கள் வம்சத்தில் யார்செய்த புண்ணியத்தாலோ உன்னைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றேன். இனிநான் தன்னியையானேன். ஜகதீசா! நின்பால் அன்புடையவனும், சக்ரவர்த்தித் தன்மைக்கு உரியவனும், மகாதேஜஸ்வியும், தன் ஒழுக்கத்தினின்றும்

சங்குசக்ரதாரரும் உலகரக்ஷகருமாகிய நாராயண மூர்த்தியிடம் தன் அன்னை பத்மாவதியைப் போலவே அம்பரீஷனும் விசேஷமான பக்தி செலுத்திவந்தான்.

* 2. உலகத்தில் மானிடப்பிறவி எடுத்தலரிது; அதிலும் இவ்வாறு அங்கவீனம் இல்லாமலும் அளவிறந்த ஐச்வரியவானாகவும், அறிவில் மிக்கவனாகவும் பிறத்தலரிதாகும். இவைகளுடன் தெய்வபக்த சிரோமணியாக விளங்குவது அரிதினுமரிதேயாம். தெய்வபக்தி எவனிடத்துப் பரிபூர்ணமா யமைந்திருக்கிறதோ அவனிடம், மானிடர்க்கு இயற்கையாகவே பகையாயிருந்து அவர்களைப் பிறப்பிற்கும் இறப்பிற்கும் நரக வாசத்திற்கும் உள்ளாக்கும் காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாற்சரியம் என்னும் அறுவகைப் பகைகளும் அணுகா. உலகத்தில் பலர் நீதிமான்களாகவும், அறிவிற்சிறந்தவராயும், கலைவல்லோராயும் புஜபல பராக்கிரமமுடையவராயும் இருக்கலாம். ஆனால் இவ்வறுவகைப் பகைகளையுங் களைந்து களங்கமற்ற சித்தமுடையோராயிருத்தல் மிகவுமரிதாம். உலகப்பற்றை முற்றுமொழித்த தபோதனர்களே சில சமயம் இப்பகைவர்களுக்குள்ளாகிக் கலக்கமடைகின்றனர். இவைகளைத் தொலைக்கத்தக்க வஜ்ராயுதமெதுவென்று நோக்கின், தெய்வபக்தியேயாம். இது அம்பரீஷனிடம், அவன் எந்தப் பிறவியிற் செய்த புண்ணிய வசத்தாலோ அமைந்திருந்தது. ஆகையால், அவன் தெய்வத்திற்கு நல்லவனாய் இருப்பது போல உலகத்தில் எல்லோருக்கும் நல்லவனாகவே இருந்தான்.

---

* தெய்வபக்தியின் விசேஷத்தை விளக்கியுள்ளது.

3. அம்பரீஷனுடைய அருமையான குணத்திற்கும் அவன் ஐச்வர்யத்திற்கும் அவனுடைய புகழுக்கும் ஏற்ப ஒரு பெண் குழந்தை பிறந்தது. அப்பெண்குழந்தை திருப்பாற் கடலிலே உலகம் புகழத்தோன்றிய திருமடந்தையோ என்றுசொல்லத் தக்க அழகுவாய்ந்திருந்தது. அதற்கு அம்பரீஷன் ஸ்ரீமதியெனத் திவ்ய திருநாமம் புனைந்து அருமையாக வளர்த்து வந்தான்.

4. பின்னர்ச் சில வருஷங்கள் கடந்தன. அப்பால் அம்பரீஷன், ராஜ்யம் மக்கள் மனைவி உற்றார் யாவரும் சதமல்ல வென்பதை நினைத்துத் தனக்கு அழியாத நிலையினைத் தருவதாகிய ஜகதீசன் திருவருள் பெற வேண்டுமென்னும் அவாவுடைய வனாகித் திடமொன்று அமைச்சர்களிடம் தன் அரசை யொப்புவித்துவிட்டுத் தான் தனியே காட்டுக்குச் சென்று அங்கே அநேக வருஷகாலம் சங்கு சக்ர கதாபத்மதாரியும், சதுர்ப்புஜங்களுடன் கூடிய பிரமா விஷ்ணு சிவசொரூபியும் புராண புருஷரும் புருஷோத்தமருமாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை இதயாரவிந்தத்தில் நிலைநிறுத்தித் தவம் புரிந்து வந்தான்.

5. அகிலபுவன கர்த்தாவாகிய நாராயணமூர்த்தி அவனது தவத்திற்கிரங்கி, அநேக தேவர்கள் புடை சூழ்ந்து வர, கருடவாகனத்தின் மீது எழுந்தருளி அந்த வனத்திற்கு வந்தனர்.

6. ஜகத்பிரபுவாகிய மாதவன் அம்பரீஷனைக் கண்டதும் அவன் மனத்தின் திடத்தைச் சோதிக்கத் திருவுளங்கொண்டார். உடனே தமது கருடவாகனத்தை ஐராவதமாக மாற்றிக் கொண்டு தாம்

தேவேந்திரனே ஓருவங்கொண்டு அம்பரீஷன் முன்னே தோன்றி "அம்பரீஷா! உனக்கு மங்கள முண்டாகக்கடவது. நான் ஸ்வர்க்கலோகநாதனாகிய இந்திரன். உன்னைக் காப்பாற்ற எண்ணி இன்று நான் இங்கு வந்திருக்கின்றேன். நீ விரும்புவதென்ன? அளிப்பதற்குச் சித்தமாயிருக்கிறேன்; கேட்பாயாக?" என்றனர்.

7. அறிவில் மிக்கானும் ஹரிபக்த சிரோமணியுமாகிய அம்பரீஷன் ஐராவதத்தின்மீது எழுந்தருளியிருக்கும் இந்திரனை நோக்கி, "இங்கே நான் உன்னை உத்தேசித்துத் தவம்புரியவில்லை; உன்னிடமிருந்து நான் எந்த வரத்தையும் விரும்புகின்றேனில்லை. நீ வந்தவழி நோக்கிச் செல்லலாம். உலக கர்த்தாவாகிய நாராயண மூர்த்தியே எனக்கு நாதன். நீ வீணே இங்கு வந்து எனதாச்சிரமத்திற்குக் கெடுதி செய்யாதே, செல்" என்றனன்.

8. இதைச் செவியுற்றதும் பகவான் அம்பரீஷனுடைய திடமான பக்திக்கு மகிழ்வுற்று, அக்கணமே சங்கம், சக்கரம், கதை, சார்ங்கம் முதலிய ஆயுதபாணியாய் அஞ்சனபர்வதம்போலக் கருடவாகனத்தின்மீது அவனுக்கெதிரே தோன்றினர். அந்தப் பரமபதியைக் கண்ணுற்றதும் அம்பரீஷன் அவிசிறந்த ஆநந்தங்கொண்டு தரையிலே விழுந்து பணிந்தெழுந்து "ஏ லோகநாதா! அருள்புரிய வேண்டும்! நாதனே! ஜகத்பதியே! ஸர்வலோக சரண்யா! ஆதிபுருஷா! அப்ரமேயா! கமலலோசனா! உன்னையே சரணமடைந்தேன், காப்பாற்ற வேண்டும், வேறு கதியில்லேன்" என்று ஸ்தோத்தரித்தான். பகவான் அவன் ஸ்தோத்திரத்திற்குகந்து "அம்பரீஷ, எனது

பரமபக்தன் நீயே யாகின்றாய்! உனது தவத்தினால் நான் மிகவும் மகிழ்ந்தேன். உன் விருப்பமென்ன? தெரிவி; அளிக்கின்றேன்; நான் எப்போதும் அன்பர்களுக்கு அன்பனாக இருப்பவன். உனக்கு வரமளிப்பதன்பொருட்டு இங்கு வந்திருக்கிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

9. இங்ஙனம் இறைவன் கூறியதும் அம்பரீஷன் ஆனந்த பரவசனாகித் தழதழத்த குரலோடு "விஷ்ணு வென்னுந் திருநாமங்கொண்ட உம்மிடத்திலேயே என் சித்தமிருத்தல் வேண்டும்; இந்தப் பூமண்டல முழுவதும் உமது பக்தர்களாக வேண்டும்; இந்தப் பூமிக்கு நான் சக்ரவர்த்தியாதல் வேண்டும்." என்னும் இவ்வரங்களைக் கேட்டான். பகவான் அம்பரீஷனை நோக்கி "உன் கோரிக்கை நிறைவேறும். இந்தச் சக்ராயுதத்தை உனக்குத் தருகின்றேன். பெற்றுக் கொள். முனிவர்களுடைய சாபத்தினால் ஏற்படும் துக்கங்களையும் இது நிவர்த்திக்கும். பகைவர், பிணி இவைகளாலேற்படும் துக்கங்களையும் இந்த ஆயுதம் நிவர்த்திக்கும்" என்று கூறி அந்த ஆயுதத்தை அம்பரீஷனிடம் அளித்தருளி மறைந்தனர்.

10. பின்னர் அம்பரீஷன் தவத்தினின்றும் எழுந்து நாராயணனைத் தியானித்தவாறே அயோத்தியை யடைந்து முன்போல இராஜ்யபரிபாலனம் செய்துவந்தான்.

11. அயோத்தியில் அந்தணர் முதலிய நான்கு வருணத்தவரும் தத்தம் மரபிற்கேற்ற ஒழுக்கத்தினின்றுந் தவறுமல் இருந்தனர்; வீடுதோறும் விஷ்ணுமூர்த்தியை வைத்து ஆராதனை புரிந்துவந்தனர். எங்கே பார்த்தாலும் வேதகோஷங்களும்

ஹரிநாம ஸங்கீர்த்தனங்களும் யாகமந்திர கோஷங்களும் நிறைந்திருந்தன. அப்போது எல்லாப் பொருள்களும் மலிந்திருந்தன. ஜனங்கள் குறை வொன்றுமில்லாதிருந்தார்கள். வியாதிபயம், சோரபயம் என்பன கிடையா. ஆகையால் ஜனங்களெல்லாரும் தன்னைப் புகழ்ந்து வாழ்த்த அம்பரீஷன் அரசுசெலுத்தி வந்தான்.

## அத்தியாயம்—3.

ஒருநாள் பகற் பொழுதில் அம்பரீஷன் சந்தோஷமாயிருக்கும் வேளையில் அவ்விடத்திற்குப் பர்வதமுனிவரும் மகிமைபொருந்திய நாரதமுனிவரும் வந்தார்கள். அம்பரீஷன் அம்முனிவர்களைக் கண்டதும் நமஸ்கரித்து அன்புடன் வரவேற்று விதிப்படி பூஜித்து உபசரித்தான். முனிவர்களிருவரும் அம்பரீஷனை ஆசீர்வதித்து மனமகிழ்ந்தனர். அப்போது அரசனது மாளிகையின் மற்றொரு புறமிருந்து ஸ்ரீமதி அன்னம்போல நடந்து அரசனுக்கருகே வந்து நின்றாள்.

2. அக்கன்னிகையைக் கண்டதும் நாரதமுனிவர் பரமாச்சர்யமடைந்து "அம்பரீஷ! லக்ஷணங்களெல்லாமமையப்பெற்ற இப்பெண்மணி யார்?" என்று கேட்டார். அம்பரீஷன் "முனிவர்பெருமானே! இந்தக் கன்னிகை என் பெண்; இவள் பெயர் ஸ்ரீமதி; இவளுக்கு ஒரு வரன் வேண்டும்; பார்த்துக்கொண்டிருக்கின்றேன்; சரியாய்க் கிடைக்கவில்லை" யென்

ருன். அப்பொழுது நாரதர் ஸ்ரீமதி யென்னும் அந்தக் கன்னிகையைத் தாமடைய விரும்பினர். அவருக்கு அருகே வீற்றிருந்த பர்வதமுனிவரும் ஸ்ரீமதியைத் தாமடையக் கருதினர். பிறகு இருவரும் அம்பரீஷனோடு சற்று நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்து விடைபெற்று அங்கிருந்து புறப்பட்டனர். அப்போது நாரதமகாமுனிவர் அம்பரீஷனைத் தனித்த ஓரிடத்திற்கு அழைத்துச்சென்று தாம்கொண்ட கருத்தைத் தெரிவித்தார். அரசன் "அதைப்பற்றிப் பிறகு தெரிவிக்கின்றேன்" என, நாரதமுனிவர் அங்கிருந்து திரும்பினர். பின் பர்வதமுனிவரும் அம்பரீஷனிடம் சென்று தாம்கொண்ட கருத்தை வெளியிடவே, அரசன் "இதென்ன வம்பு? சண்டைபோடும் இரண்டாட்டிற்கிடையே யகப்பட்ட நரியின் கதியாயிற்று நமது பாடு! இதைப்பற்றி முடிவான தொன்றும் நாமிப்போது இவர்கட்குத் தெரிவிக்கக் கூடாது" என்று எண்ணி இருவரையும் பார்த்து "ஐயன்மீர்! நீங்களிருவரும் எனது பெண்ணை விரும்புகின்றீர்கள். நீங்களோ எல்லாந் தெரிந்த மகான்கள். நான் தங்களுக்கு என்ன தெரிவிக்கப் போகின்றேன். நான் ஒருநல்லநாளில் சுயம்வரம் ஏற்படுத்த உத்தேசித்திருக்கின்றேன். அப்போது நீங்களிருவரும் வரவேண்டும். அநேக தேசத்து அரசர்களும் வருவார்கள். அந்தக் கூட்டத்தில் என் புத்திரி உங்களிருவருள் யாரை வரிக்கினும் சரி; அல்லது வேறு எந்த அரசனை வரிக்கினும் சரி; நான் அவ்வாறே வரனை நிச்சயிக்கின்றேன்; இஃது திண்ணம்" என்றான். முனிவர்களிருவரும் அவ்வாறே யாகட்டுமெனக் கூறி விடை கொண்டு சென்றனர்.

3. பிறகு நாரதமுனிவர் "இதற்கென்ன யோசனை செய்வது; ஸ்ரீமதி நம்மை வரிக்காமல் பர்வதமுனியை வரித்து விட்டா லென்ன செய்கிறது? பிறகு நமக்குப் பெரிய அவமானமன்றோ நேரிடும்; என்ன செய்யலாம்?" என்று நெடுநேரம் யோசித்து அப்பால் விஷ்ணுவிடம் போவதாகத் தீர்மானித்து வைகுண்ட லோகஞ் சென்று பகவானை வணங்கி, "புவனேசுவர! பரம கருணாநிதியே! உமக்கு நமஸ்காரம்; தங்களிடத்தில் இரகஸ்யமாக ஒரு விஷயந் தெரிவிக்கும் பொருட்டு வந்திருக்கின்றேன்; சிறிது செவிகொடுத்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். பகவான், மந்தஹாஸஞ் செய்து "நாரதமுனிவரே! உமது சித்தக்கருத்தைத் தெரிவியும்" என்றார். உடனே நாரதர் "பிரபுவே! உமது சரணாரவிந்தத்தை மறவாத பரமபக்தனை அம்பரீஷன் என்னும் அயோத்தியாதிபதிக்கு ஒப்புயர்வற்ற அழகுவாய்ந்த ஒரு பெண்மணியிருக்கின்றாள். அவள் பெயர் ஸ்ரீமதி. அந்தப் பெண்மணியை நான் மணஞ் செய்துகொள்ள விரும்புகின்றேன். உமது திருவடி மறவாத பர்வதமகா முனிவரும் அந்தக் கன்னிகையைத் தாம் மணந்துகொள்ள விருப்பங்கொண் டிருக்கின்றனர். நாங்களிருவரும் அம்பரீஷ மகாராஜனிடம் எமது கருத்தைத் தனித் தனியே தெரிவித்துக்கொண்டோம். அரசன் "சுயம் வரம் ஏற்படுத்துகின்றேன்; அப்பொழுது அரசர்களெல்லோரும் வருவார்கள்; நீங்களிருவரும் அச்சமயம் வந்திருங்கள்; அப்போது உங்களிருவரில் என் குமாரத்தி யாரை மணந்துகொள்ள விரும்புகிறளோ அவரையே நான் வரனுக்க் கொள்கின்றேன்" என்று தெரிவித்திருக்கிறன். அதுகேட்டு நாங்களிருவரும்

" அவ்வாறே செய்யலாம் " என்று தெரிவித்து அவனிடம் விடைகொண்டு அங்கிருந்து திரும்பிவிட்டோம். தேவரீர், எனது விருப்பத்தை நிறைவேற்றல்வேண்டும். இறைவனே ! சுயம்வர மண்டபத்துக்கு வரும் பர்வதமுனிவருடைய முகம் அந்தப் பெண்மணியின் கண்ணுக்குக் குரங்கின் முகம்போலக் காணவேண்டும். அப்படிக் காணப்படுமாயின் அவரை ஸ்ரீமதி வரிக்கவே மாட்டாள். பின் என்னை விரும்புவாளென்பதில் ஐயமில்லை " என்று தமது எண்ணம் முற்றுப்பெறுதற்கு உபாயமும் தெரிவித்துக் கொண்டார்.

4. இது கேட்டதும், பரந்தாமன் தலையயசைத்துப் புன்முறுவல் செய்து, " முனிவரே ! நீர் உமதிருப்பிடம் போகலாம்; உமது கருத்து நிறைவேறும் " என்றார். நாரதர் " நாம் சித்தியடைந்தோம்; இனி ஐயமில்லாமல் ஸ்ரீமதி நம்மையே வரிப்பாள் ; பக்தனுக்கு இரங்கும் பரமதயாளனின் அருள் கிடைத்த பின்பும் தடை ஏற்படுமோ ? யாவும் அவன் செயல் ; அவன் நினைக்கின் உலக முழுதும் இல்லாமலே போய் விடும். அவன் செயலை யாரறியவர் ? ஆதியந்த மில்லாத அந்த மாதவன், பக்தி ஒன்றுக்குத்தான் கட்டுப் பட்டவர். என் பக்திக்கு அவரது மனம் மகிழ்ந்தது போலும் " என்றெண்ணி இருகரங்களையுஞ் சிரமேற் குவித்து நின்று—

" குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தாஞ் செய்யும் நீள்விசும் பருளு
மருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற தாயினும்
ஆயின செய்யும்

நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம்."

என்று பகவானைத் துதித்து மனமகிழ்ச்சியோடு சென்றார்.

5. பிறகு பர்வத மகாமுனிவரும் 'ஸ்ரீமதி சுயம்வரத்தில் நம்மை வரிக்காமல் நாரதரை வரிக்கின் நமது விருப்பம் நிறைவேறாமற் போய்விடுமே' என்று எண்ணிக்கொண்டு நெடுநேரம் யோசித்து நாராயணமூர்த்தியிடம் சென்று நமக்கு வழிதேடிக்கொள்ள வேண்டுமென்று நிச்சயித்து, அவ்வாறே பகவானிடம் வந்தார்; சங்குசக்ர பீதாம்பரதாரியாகிய ஜகத் பிரபுவை வணங்கித் தமது மனத்திற்கொண்ட விருப்பத்தைத் தெரிவித்து, "சுயம்வர சமயத்தில் நாரதரின் முகம், ஸ்ரீமதிக்கு மாத்திரம் கோலாங்கூலம் என்னும் குரங்கின் முகம்போலத் தெரியவேண்டும்; அப்போது அவள் அவரை வரியாது, என்னையே விரும்புவாள்" என்று கூறினார்.

6. இதுகேட்ட பகவான் புன்சிரிப்படைந்து 'முனிவரே! நீர் போகலாம்; உமது கருத்துப்படியே யாகும். ஆனால் நீர் இச்செய்தியை நாரதரிடம் தெரிவிக்க வேண்டாம்'' என்றார். பர்வதமகா முனிவர் "சகலலோக சரண்யனாகிய ஈசன் நினைக்கின் எதுதான் முடிவதரிதாகும்? பகவான் பக்த பராதீனனல்லவா? கடவுளை நம்பினோருங் கைவிடப்படுவதுண்டோ? நாம் கிருதார்த்தனானோம்" என்றெண்ணித் தரையில் விழுந்து பணிந்தெழுந்து கைகுவித்து நின்று—

"பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தங் கொழுந்தே என்னும்

இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே"

என்று துதித்து ஜகத்பதியைத் தியானித்தவாறே சென்றார்.

---

## அத்தியாயம்—4.

---

ஸ்ரீமதியின் சுயம்வர தினம் வந்தது. அயோத்தியாபுரி யெங்கும் மங்களகரமான பதாகைகள், தோரணங்கள், மலர்மாலைகள், பூரணகும்பங்கள் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. தெருக்களெங்கும் நீர்தெளித்துச் சுத்தஞ்செய்யப்பட் டிருக்கின்றன. பட்டணமெங்கும் வாசனை வஸ்துக்களாலும் மலர் மாலைகளாலும், வாழை, கமுகு பேரீஞ்சு, மாவிலை முதலியவைகளாலும் அலங்கரிக்கப்பட் டிருக்கின்றது. அரசர்கள் வீற்றிருக்கத் தக்கபடி மண்டபத்தில் அங்கங்கு ஆசனங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. சபையானது தேவலோகத்துச் சுதர்மையோ அல்லது குபேரன் சபையோவென்று எண்ணத்தக்க பிரகாசத்தோடு விளங்குகிறது.

2. இவ்வாறு விளங்கும் திவ்ய சபைக்கு அரசர்கள் ஒருவர் பின் ஒருவராக வந்து அம்பரீஷன் உபசரணையைப் பெற்று ஆசனத்தமர்ந்தனர். அம்பரீஷன், நாரதமுனி, பர்வதமுனி இவர்களுடைய வருகைக்கு எதிர்பார்த்துக்கொண் டிருக்கின்றான். இச்சமயம் அரசன் ஆஞ்ஞைப்படி பணிவிடைப்பெண்கள் ஸ்ரீமதியைச் சுயம்வர மண்டபத்திற்கு அழைத்து வந்தார்கள். ஸர்வலோக நாயகனாகிய நாராயணமூர்த்தியின்

இதயாரவிந்தத்தில் இனிது அமர்ந்தருளும் லக்ஷ்மி தேவியே இந்தப் புவியில் மானிடமாதாக உருவெடுத்து வந்தனளோவென்று சொல்லத்தக்க அழகுடன் ஸ்ரீமதி விளங்குகின்றாள். லக்ஷ்மிதேவிக்கு ஒப்பிட்டபின் இனி ஸ்ரீமதியின் அவயவங்களைப்பற்றிப் பேசுவது மிகையேயல்லவா? ஸ்ரீமதியைச் சூழ அநேக பணி விடைப் பெண்கள் நின்றுகொண்டிருக்கின்றார்கள். சபையானது அவளது அழகால் ஜ்வலிக்கின்றது.

3. இங்ஙனம் விளங்கும் திவ்ய சபைக்குப் பிரஹ்ம புத்திரராகிய நாரதரும் பிரஹ்ம நிஷ்டராகிய பர்வத முனிவரும் விஜயமாயினர். தன்னுடைய சபைக்கு முனிவர் பெருமானிருவரும் எழுந்தருளியதைக்கண்ட அம்பரீஷன் மிகுந்த பரபரப்புடன் எதிர்கொண்டு சென்று அவர்களை வரவேற்றுத் தக்க ஆசனங்களில் வீற்றிருக்கச் செய்தான். முனிவர்களும் முகமலர்ச்சியுடன் ஆசனத்தமர்ந்தார்கள்.

4. பின் அம்பரீஷன் ஸ்ரீமதியை யழைத்துச் சபையில் நிறுத்தி அவள் கரத்தில் ஒரு மாலையைக் கொடுத்து அவ்விரு முனிவரையுங்காட்டி, "இவர்களுள் நீ யாரை விரும்புகிறாயோ அவரை விதிப்படி வணங்கி அவர் கழுத்தில் மாலையைச் சூட்டு" என்று சொன்னான். ஸ்ரீமதி மாலையை வாங்கிக்கொண்டு சித்தப்பிரமை கொண்டவள்போல ஒன்றுஞ்செய்யாமல் நின்றாள். அம்பரீஷன், "குழந்தாய்! என்ன யோசிக்கின்றாய்? இவ்விருவருள் நீ யாரை விரும்புகிறாயோ அவர் கழுத்தில் மாலையைப் போடு" என்றான். ஸ்ரீமதி பயந்து தன் தந்தையின் திருமுக நோக்கி, "இவ்விருவருடைய முகங்களும் என் கண்ணுக்குக் குரங்கின்முகம்போலத் தெரிகின்றன. தாங்

கள் கூறியபடி இவர்கள் நாரத பர்வத முனிவர்களல்லர்; இவர்களுக்கு மத்தியில் பதினாறு வயதுள்ள ஒரு சுந்தரவாலிபனிருக்கின்றான். இவன் சர்வாபரண பூஷிதனாக விளங்குகின்றான். இவனது மேனி நீலமேகம் போலப் பிரகாசிக்கின்றது. கைகளிரண்டும் உத்தம புருஷர்களின் இலக்ஷணங்களுக்கொத்தவாறு முழந்தாள் வரையில் நீண்டிருக்கின்றன. கண்களிரண்டும் தாமரை மலர்போலப் பிரகாசிக்கின்றன. தொடைகளின் அழகு வர்ணிக்கமுடியாமலிருக்கிறது. இந்தத் திவ்விய சுந்தர புருஷன் இடுப்பில் தரித்திருக்கும் வஸ்திரமும் மேல் உத்தரீயமும் சொர்ணத்தின் காந்தியைவிட மேலாகக் காணப்படுகின்றன. வயிறு ஆலிலைபோலச் சிறுத்து மூன்று மடிப்புடன் தெரிகிறது. அதனிடையேயுள்ள உந்தி வெகு நன்றாய்த் தெரிகிறது. கை, கால், முகம் முதலியன செந்தாமரைபோலத் திகழ்கின்றன. பற்கள் முல்லைமலரை ஒத்து இலகுகின்றன. இப்படிப்பட்ட உத்தம இலட்சணங்களமைந்த சுந்தரன் இவ்விருவருக்கும் இடையே மறைந்திருந்து மந்தஹாஸத்துடன் என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். உங்கள் கண்ணுக்குத் தென்படவில்லையா?" என்றாள்.

5. இதைக் கேட்டதும் நாரதமுனிவர் ஆச்சரியமடைந்து "பெண்ணே, நீ பார்க்கும் சுந்தர வாலிபனுக்குக் கைகள் எவ்வளவிருக்கின்றன?" என்று கேட்டார்.

ஸ்ரீமதி—கைகளிரண்டு தானிருக்கின்றன.

பர்வதமுனிவர்—பெண்ணே! அவனுடைய மார்பில் என்ன இருக்கிறது? கழுத்தில் அவன் பூண்டிருப்பதென்ன?

ஸ்ரீமதி—ஒரு மாலையும் கரத்தில் வில்லும் இருக்கக் காண்கின்றேன்.

6. இவ்வாறு கூறவே முனிவரிருவரும் சற்று யோசித்து—ஓகோ! இது மாயாவியாகிய மஹாவிஷ்ணுவின் மாயையாகத்தானிருக்க வேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டார்கள். அல்லாமலும் அந்த மாயாவியைத் தவிர வேறு யார் நமது முகத்தைக் குரங்கின் முகம்போலத் தெரியும்படி செய்யவல்லவர்; அவன் சேஷ்டைதான் இதுவும் எனத் தெரிந்து கொண்டார்கள்.

7. இவ்விரு முனிவரும் இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருப்பதைக் கண்ட அம்பரீஷன் "ஏன் மயங்குகிறீர்கள்?" எனக் கேட்டான். முனிவர்கள், "நாங்கள் மயங்கவில்லை; மயக்கங்கொண்டிருப்பது நீ தான். எங்களிருவரில் யாரையேனும் ஒருவரை உன் புத்திரி வரிக்கட்டுமே" என்றார்கள். ரிஷிகள் சபித்து விடுவார்களோவென்று அச்சமடைந்த அரசன் ஸ்ரீமதியைப் பார்த்து "இவ்விருவருள் யாருக்கேனும் மாலையைப்போடு" என்று சற்றுரத்துக் கூறினான். ஸ்ரீமதியும் பயந்து "என்ன அநியாயமிது! அரச குடும்பத்திற் பிறந்த நான், குரங்கு முகமுடைய புருஷனுக்கா மாலையிடுவது? என் விதியை என்னென்று சொல்வேன்!" என்றெண்ணி மனங்கலங்கி உடனே "ஆ! ஜகதீசா! ஜனார்த்தனா! பரமதயாநிதியே!" என்று மனத்தில் பரமபதியாகிய கடவுளைத் தியானித்தவாறே சற்று நின்றாள். உடனே அந்த க்ஷணத்தில் முன்தோன்றிய சுந்தர வாலிபன் மீண்டும் எதிர்ப்பட்டான். ஸ்ரீமதி உடனே அந்த வாலிபன் கழுத்தில் மாலையை யணிந்தாள்.

மாலையை யணிந்த மறு நிமிஷத்திலேயே ஸ்ரீமதியை அங்கொருவரும் பார்க்கவில்லை. சபை முழுதும் பெரிய ஆச்சரியமடைந்தது. "என்ன! என்ன!! எங்கே விவாகப்பெண்? யாரெடுத்தேகியது? யாருக்கு மாலையிட்டாள் அந்தச் சுந்தரி? எந்த வீரன் நம்மை யறியாமல் எடுத்தேகியவன்?" என்று ஒருவர்க்கொருவர் கேட்டுக்கொண்டு ஆசனத்தை விட்டெழுந்து ஆ! ஆ! என்றார்கள். பெரிய குழப்ப முண்டாயிற்று. வந்த அரசர்களிற் பெரும்பான்மையர் பற்பல படியாகப் பேசிக்கொண்டு தத்தம் தேசத்திற்குச் சென்றனர். ஸ்ரீமதி யாரால் அப்படிக் கிடீரென்று கொண்டுபோகப்பட்டாள் என்பதை யறிய விருப்பங்கொண்டு சிலர் அயோத்தியிலேயே தங்கினார்கள். சிலர் அம்பரீஷ மகாராஜன் ஏதோ சூது செய்து விட்டானென்றும் பேசிக்கொண்டார்கள்.

8. முனிவர்களிருவரும், இது மகாவிஷ்ணு செய்த மாயமாகத்தா னிருக்க வேண்டுமென நிச்சயித்து வைகுண்டம் சென்றார்கள்.

9. ஸ்ரீமதி வைகுண்டத்தி லிருக்கிறாள். இவள் முற்பிறப்பில் மகாவிஷ்ணுவைத் தான் அடைய வேண்டுமெனக் கருதித் தவமியற்றியவளாதலால் இப்பிறப்பில் பகவான் அவள் கோரிக்கையை நிறைவேற்றக் கருதி இப்படிப்பட்ட லீலையைச் செய்தார். தவத்தின் பலன் வீணாகுமா?

10. மிகுந்த கோபத்துடன் அயோத்தியிலிருந்து புறப்பட்ட முனிவர்கள் வைகுண்டத்தை யடைந்து பகவானிருக்குமிடத்தை நோக்கிச் சென்றார்கள். அவர்கள் வருவதைக் கண்ட பகவான் ஸ்ரீமதியைப் பார்த்து, "முனிவர்க ளிருவரும் வருகிறார்கள். நீ

மறைவாக இரு; வேடிக்கை செய்கின்றேன்" என்றார். ஸ்ரீமதி அவ்வாறே மறைந்திருந்தாள்.

11. முதலில் நாரதர் பிரவேசித்து பகவானை நமஸ்கரித்து "என்னையும் பர்வத முனிவரையும் இப்படிச் செய்யத்தகுமா? நீர் தாம் அந்தப் பெண் மணியை யெடுத்து வந்திருக்கிறீர். இது நிச்சயம்" என்று சொன்னார். பகவான் உடனே தம் இரு செவிகளையும் இருகரங்களால் பொத்திக் கொண்டு "அந்தப் பெண்மணியை நான் விரும்பி எடுத்துக் கொண்டு வரவில்லை" என்றார். நாரதர், "போகட்டும்; என்முகம் குரங்கின் முகம்போ லிருக்கிறதென்று சொல்லக் கேட்டேன்; அதென்ன காரணம்" என்றார். பகவான், "முனிவரே! உமது பிரார்த்தனைக் கிணங்கி முதலிற் பர்வத முனிவருடைய முகம் குரங்கு முகமாகத் தோன்றும்படி செய்தேன்; பிறகு அவர் என்னை வேண்டிக்கொண்டார். அதற்கிணங்கி உமது முகமும் குரங்கு முகமாகத் தோன்றும்படிசெய்தேன் நான் பக்திக்குக் கட்டுப்பட்டவ னல்லவா? அதனாலே தான் இப்படிச் செய்தேன். நானாக ஒன்றும் செய்யவில்லை. என் பக்தர்கள் விரும்புகிறபடியேநான் வரங்கொடுத்து வருபவன். இது சம்பந்தமாய் என்னிடத்திலோ அல்லது உங்களிடத்திலோ ஒரு குற்றமும் சொல்லக் காரணத்தைக் காணேன்" என்றார்.

12. பிறகு பர்வதமுனிவர் வந்து பகவானை வணங்கி நின்றார். அவரைப் பார்த்து பகவான் புன்னகைபுரிந்து நாரதரிடம் கூறியதுபோலவே சொல்லி "என் ஆயுதத்தைத் தொட்டுக் கூறுகின்றேன்;

நான் உங்கள் விருப்பப்படி செய்தேனே ஒழிய நானாக ஒன்றும் செய்யவில்லை" என்றார்.

13. இதைக் கேட்டதும் நாரதர் பகவானைப் பார்த்து "சுயம்வர சபையில் எங்களிருவருக்கும் நடுவில் வில்லைக் கரத்திற்கொண்டு நின்று ஸ்ரீமதியை மயக்கி அபகரித்து வந்தவன் யாவன்?" என்று கேட்டார். பகவான் "நாரதரே! இதை யார் கண்டது; நான் சக்ராயுத முடையவனென்றும் நான்கு புயங்களையுடையவனென்றும் நீங்களறிவீர்களல்லவா? உலகத்தில் மாயாவிகள் பலரிருப்பார்கள். அவர்களுள் யார் செய்த வேலையோ இது! கண்டதார்?" என்றார்.

14. பிறகு முனிவர்களிருவரும் "பகவானிடத்தில் ஒரு குற்றமுங் காணோம்; அம்பரீஷன் தான் ஏதோ சூது செய்திருக்கிறான்" என்று கருதி அங்கிருந்து அயோத்திக்கு வந்து அரசனைக் கண்டு, "அம்பரீஷா! இது நியாயமா? பெண்ணைத் தருகிறேனென்று வரவழைத்து விட்டு வேறொருவனை மறைத்து வைத்திருந்து அவனுக்குப் பெண்ணைக் கொடுத்து எங்களை மோசஞ் செய்தது தகுமா? ஆகையால் உன்னைப் பேரிருள் சூழ்ந்து கொள்ளக்கடவது; உன்னறிவு உனக்கில்லாமற் போகக்கடவது" என்று சாபமிட்டனர்.

15. உடனே அரசனைப் பேரிருள் சூழ்ந்து கொண்டது. அரசன் பரந்தாமனைத் தியானித்தான். பரந்தாமனது சக்கரம் அங்கே தோன்றிற்று. அது கண்ட முனிவர்கள் பயந்து ஓடினார்கள். சக்கரம் அங்குச் சூழ்ந்த இருட்டைப் போக்கிக் கொண்டு முனிவர்களைத் துரத்திற்று. முனிவர்கள் தப்பவழி வேறு காணாமல் மீண்டும் வைகுண்டமே சென்று

பகவானை யடைந்தார்கள். பகவான், "அம்பரீஷனும் நமது பக்தன்; இவர்களும் நமது பக்தர்களே! பக்தர்களுக்கு எந்தக் குறைவும் ஏற்படக் கூடா"தென்று கருதி சக்கரத்தைத் தடுத்து, "பொறுத்துக் கொள்ள வேண்டும்; பக்தனாகிய அம்பரீஷனைக் காக்கும் பொருட்டு என்னால் இந்த மாயம் செய்யப்பட்டது; பொறுத்துக்கொள்ள வேண்டும்; பொறுமையைப் பூஷணமாகக் கொண்டவர்களல்லவா நீங்கள்" என்றார். இதைக்கேட்டதும் முனிவரிருவரும் பகவானுடைய மாயையை யறிந்து வியப்புற்றுப் பார்த்து, "நாராயண! எந்த ரூபத்துடன் மறைவாக இருந்து ஸ்ரீமதியை யபகரித்து வந்தீரோ அந்த ரூபத்தோடு அம்பரீஷன் வம்சத்தில் பிறக்கப் போகும் தசரதனுக்குப் புத்திரனாக நீர் பிறத்தல் வேண்டும்! ஸ்ரீமதியும் பூமியில் உற்பவித்து ஜனக மகாராஜனுக்குப் புத்திரியாதல் வேண்டும்! இப்பொழுது, நீர் எங்களை ஏமாற்றி ஸ்ரீமதியை யபகரித்துக் கொண்டு வந்ததுபோல, அப்போது உனக்கு மனைவியாகும் அந்த ஜனகன் புத்திரியை ஓர் இராக்ஷஸன் அபகரித்தெடுத்துக் கொண்டு போதல் வேண்டும். இப்போது நாங்களிருவரும் இந்த ஸ்ரீமதியின் பொருட்டு எந்தத் துக்கத்தை யடைந்தோமோ அந்தத் துக்கத்தை நீர் அநுபவித்தல் வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். பகவான், "நீங்கள் என் பரமபக்தர்கள்; தவிர, முனிவர்கள்; உங்களுடைய விருப்பம் வீண் போகலாகாது. ஆகையால் நான் அவ்வாறே செய்கின்றேன்" என்றார். முனிவரிருவரும் பகவானை வணங்கி விடைபெற்றுச் சென்றார்கள்.

16. போகும் வழியில் 'இனி நமது தேகமுள்ள வரையில் விவாகம் செய்துகொள்ள எண்ணிப் பெண்களை விரும்புவதேயில்லை' எனப் பிரதிஞ்ஞை செய்து கொண்டார்கள். பெண்ணை விரும்புவது பெருஞ் சங்கடமெனவும் சொல்லிக் கொண்டார்கள். இவ்வாறு பேசிக்கொண்டே தத்தம் ஆச்ரமமடைந்து எப்போதும் போலிருந்தார்கள். அம்பரீஷனும் பகவானது திருவிளையாட்டை யெண்ணி யெண்ணி வியந்து தன் இராஜ்யத்தை நீதி தவறாமல் ஆண்டு வந்து கடைசியில் மகாவிஷ்ணுவின் உலகம்சென்றான்.

17. பகவான் சர்வலோக சரண்யர்; சர்வலோகங்களையும் படைத்தவர். அவரன்றி அணுவும் அசையாது. அவராஞ்ஞைப்படி யாவும் நடைபெறும். அவரைச் சரணமடைந்தவர்க்கே இகபரசுகமிரண்டும் கிடைக்கும். அவரது கருணை பெறாதவர்கள் இகபரமிரண்டிலும் துன்பமடைவார்கள். அப்படிப்பட்ட கருணையைப் பெற யாவரும் முயலவேண்டும். அதுவே மானிட ஜன்ம மெடுத்தவர்கட் கழகு. அது தவறிக் கண் தலை தெரியாமலும் இம்மை மறுமை உணராமலும் அலையும் அவிவேகிகளின் ஜன்மம் வீணேயாம்.

18. பெறற்கரிய செல்வமாகிய அந்தக் கருணை பக்தியாலன்றிச் சித்தியாதென்பது இந்தத் திவ்ய சரித்திரம் நமக்கு நன்கு விளக்குகிறது. அம்பரீஷன் அபார பக்தி செலுத்திப் பகவானது கருணைக்குப் பாத்திரமான படியாலல்லவா தன்னைச் சினந்து சபித்த முனிவர்களிடமிருந்து தப்பினான்! பகவான் பக்தபராதீனனென்பதை, அவர் இவ்விரு முனிவரிடமும் நடந்து கொண்டதே நன்கு விளக்குகிறதன்றோ? ஆகையால் பகவானுடைய கருணையை எவ்விதத்திலும் அடைய வேண்டும் என்பதும் அந்தக் கருணைக்கு ஆதாரமாகிய பக்தி புரிதல் இன்றியமையாத தென்பதும் நாம் ஒவ்வொருவரும் கவனிக்கத் தக்கனவாம்.

முற்றிற்று.

# நான்முகம்

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினுமப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

எதிர்கால வாழ்க்கைக்கு இளைஞர் இன்றியமையாதவர். அவர் கள் உரிமை யொழுங்குகளின் பொருட்டு உலகப் போராட்டத்தில் எத்தனையோ இன்னலிடைஞ்சல்களை யெதிர்க்க நேரிடும். அவற் றிற்குத் தக்கல மறுப்பும் நன்னிலை யொழுக்கமும் இயற்கையி லமைந்திருக்கவேண்டும். அக்குணங்கள் சரித்திர ஞானத்தாலன்றிச் சாதாரணமாகக் கிடைக்கத் தக்கதல்ல. புராணங்களிலும் இதி காசங்களிலும் வரும் கதைகளிற் பெரும்பாகமும் சரித்திரங்களே. அவற்றில் உட்பொருள் (தொனி) நிறைந்திருப்பதனை யுத்தமசரித் திரமென்பர். வியாசர் முதலிய மகா கவிகளியற்றிய சரித்திரங் களில் இவ்வுட்பொருட்டெளிவை மிகுதியாய்க் காணலாம். உலகத் திலேற்கொண்டுகொள்ள வேண்டிய வொழுங்குகளைச் சரித்திரம் உண் மையில் தெரிவிக்கும். நீதிகளை இளைஞர்க்குப் புகட்டக் கதை வாயிலன்றிப் பிறவாயில்கள் பயன்படாவென்பது அவர்கள் துணிபு. இக்காலத்தவரும் இதனை யங்கீகரிக்கின்றனர்.

இளைஞர் மனம் கதைப்புத்தகங்களைப் படிக்கக், குதூகலிக்கும். ஆதலின், பழையவற்றில் அநாவசியத்தைக் கழித்தும், புதியவற்றில் ஆவசியத்தைக் கூட்டியும் இக்காலத்துக்குத் தக்கபடி எழுதிய கதைப் புத்தகங்கள் அவர்களுக்குத் தேவை.

புராண கதைகளிற் சிலவற்றைத் தொடர்ச்சியாகப் புனைந் தெழுதவேண்டுமென்ற பலர்விருப்பத்துக்கிணங்கி யிப்புத்தகத்தைப் பிரசுரப்படுத்தி யிருக்கிறது. செய்யுட் பாடத்தின்பொருட்டு நள வெண்பாவின் சுருக்கம் சேர்க்கப்பட்டுள்ளது. இதுபோன்ற முயற்சிகளுக்கு வித்தியாபிமானிகளின் பக்ஷம் இன்றியமையாதது.

கே. பழனியாண்டி பிள்ளை கம்பெனி.



# சந்தனு

## அதிகாரம் 1

### நதி

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று." திருவள்ளுவர்.

அத்தினபுரத்துக் கரசனும் உலகத்துக்குச் சக்ரவர்த்தியுமான சந்தனு மன்னவன் ஒரு சமயத்தில் கங்கைக் கரையில் உலாவிக் கொண்டிருந்தான். அவன் சந்திர குலத்திற் பிறந்தவன். பிரதீபன் என்ற பார்த்திபன் புத்திரன். பருத்த தோள்களையும் நீண்ட கரங்களையும் கொண்டவன். வேதத்திலும் தநுர்வித்தையிலும் தேர்ச்சி பெற்றவன். அழகிற் சிறந்தவன். முயற்சியில் மிகுந்தவன். பராக்கிரமத்திற் பரந்தவன். நிதிகளில் நிறைந்தவன். தருமம் தெரிந்தவன். அக்காலத்தில் உள்ள அரசர்கள் ஒன்று சேர்ந்து அவனைத் தங்களுக்குச் சக்ரவர்த்தியாகத் தெரிந்தெடுத்து அவன் கட்டளைக்கு அடங்கி நடந்துவந்தார்கள். அவன் ஆளுகையில் ஒழுக்கத்தில் அந்தணரும், வெற்றியில் மன்னவரும், தனத்தில் வைசியரும், அடக்கத்தில் மற்றவரும் சிறந்து விளங்கினரென்பது உயர்வு நவிற்சியன்று. இன்னும் அந்தணர் அனைவருக்கும் அருள் நிறைந்தவராகவும், அனைவரும் அந்தணர்க்கு அநுகூலராகவும் இருந்து வந்தனர். நாடெங்கும் கல்வியும் செல்வமும் தருமமும் தழைத்து வளர்ந்தன. விலங்குகளும் பறவைகளுங் கூட நேசமுற்றுப் பகையற்றுச் சிறப்புற்று

ஒத்திருந்தன. உயிர்களிடத்தில் உள்ளன்பு கொண்ட அவ்வரசர் பெருமான் பராக்கிரமத்தில் சூரியனையும், பலத்தில் வாயுவையும், கோபத்தில் யமனையும், பொறுமையில் பூமியையும் வென்று விளங்கினான்.

ஆற்றின் அழகு அவன் மனத்தை அபகரித்தது. உலக வளர்ச்சிக்கு ஆறுகள் இன்றியமையாதனவல்லவா? உலகம் அறிஞரையும் ஆறுகளையும் அவாவி நிற்கின்றது. ஆறுகள் உயிர்களை வளர்க்கின்றன. நிலத்துக்கு அழகு செய்கின்றன. உத்தம கவிகளின் சொல்வளத்தைப் போல அவைகள் நீர்வளத்தைப் பெருக்குகின்றன. கவிஞர் ஐந்திணை நிலங்களிலும் தாம் கண்டவைகளைத் தொகுத்துக் கவி புனைந்து கொடுக்கின்றனர். ஆறுகள் அவ்விடங்களுக்குச் சென்று அகப்பட்ட பொருள்களையெல்லாம் அள்ளிவந்து உதவுகின்றன. கவிஞர் மனத்தெளிவுள்ளவர். ஆறுகள் நீர்த்தெளிவுள்ளவை. பண்டிதர் நல்லொழுக்கத்துக் குறைவிடம். நதிகள் நீரொழுக்கத்துக்கு நிலையிடம். அவர் அறிவைப் புகட்டுகின்றனர். அவை உணவை ஊட்டுகின்றன. இன்னும் நதிகள் வளைந்தும், நெளிந்தும், விரைந்தும், பரந்தும் ஓடிப் பாழ்நிலங்களையும் பச்சைக் கர்ப்பூரம் விளையும் பொன்னிலமாக்குகின்றன. புராதனமான பெரிய பட்டணங்களிற் பலவும் ஆற்றோரங்களில் அமைந்திருக்கக் காண்கிறோம். 'ஆறில்லா ஊருக் கழகு பாழ்' என்பது ஆன்றோர் வாக்கு. இருகரையிலும் வளரும் சோலைகளாலும், விளை நிலங்களாலும், பட்டணங்களாலும் ஆறுகள் அழகு பெறும். ஆனால், இவ்விடத்தில் ஒன்று கவனத்துக்கு வருகின்றது. இவ்வளவு பெருமை பொருந்திய நதிகள் முதலில் மிகவும் சிறிய காடுமுருடான கற்பிளவுகளிலிருந்தும் சுனைகளிலிருந்தும் உற்பத்தியாகின்றன. இஃதொரு பெரிய வியப்பு.

"ஆக்கும் அறிவா னலது பிறப்பினுன்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு." சிவப்பிரகாசர்.

பன்னிரண்டு திங்களும் பெருகுவதனை ஜீவநதியென் பதும் மழைகாலத்தில் மாத்திரம் பெருகுவதனை வர்ஷ நதி யென்பதும் மரபு.

வட இந்தியாவிற் பெருகும் கங்கையாறு எல்லா நதி களினும் முதன்மையானது. அதனை நதியரசென்றும் கடவுள் நதியென்றும் கூறுவர். அது திருமாலின் திரு வடிச் சம்பந்தமான பிறப்பைக் கொண்டது. சங்கரக் கடவுளின் சடைக்காட்டில் சந்திரனோடு தவழ்ந்து விளை யாடியது. பகீரத மன்னவன் செய்த பெருமுயற்சியின பலனுகப் பூவுலகத்துக்கு வந்தது. பின்னர்ப் பாதாளஞ் சென்று கபிலர் சாபத்தினுல் இறந்துபோன சகரர்களின் எலும்புக் குவைகளிற் படிந்து அவர்கள் அடைந்திருந்த அலகை வடிவத்தை மாற்றி அவர்களுக்குப் புண்ணிய வுல கத்தைக் கொடுத்தது. அப்படிப்பட்ட கங்கை வட இந்தி யாவின் பெரும்பாகத்தைத் தனது வளமை பொருந்திய நீர்ப்பெருக்கினுல் இன்னமும் வளர்த்து வருகின்றது.

சந்தனு மன்னவன் அத்தெய்வ நதியின் பெருக்கில் கவனத்தைச் செலுத்திக்கொண்டு அப்படியே நடந்து நெடுந்தூரம் சென்று விட்டான். அங்கு ஒரு அழகான சோலை வளர்ந்திருந்தது. அப்பொழிலின் புதுமலரும், நறுமணமும், பசுங்காயும், சுவைப்பழமும் அவ்னது கண் ணேயும் கருத்தையும் ஒருமிக்கக் கவர்ந்தன. உள்ளே நுழைந்தவர்களின் இளைப்பை நீக்குவதனுல் அது தெய் வச் சோலைகளில் ஒன்ருே என்னும்படி விசித்திரமாக

விளங்கிற்று. அரசன் ஆச்சரியப்பட்டு அதன் அழகைக் கவனிக்கத்தொடங்கினன்.

## அதிகாரம் 2

### காட்சி

"நாற்குணமும் நாற்படையா வைம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு." புகழேந்திப்புலவர்.

கங்கைக்கரையில் இரண்டாவது லக்ஷ்மியோ வென்னும்படி ஒரு பருவ நாயகி காணப்பட்டனள். அவளுடைய களங்கமற்ற அழகு அதிக காந்திகொண்டு விளங்கிற்று. அவள் குற்றம் நீங்கியதும் குறைவற்றதுமான அங்கங்களைப் பொருந்தி யிருந்தனள். அவள் தன்னுடம்பைப் பொன்மரமாக, அன்றி இரத்தினமாமாகக் கொஞ்சமும் செய்து கொள்ளவில்லை. இன்றியமையாத இரண்டொரு ஆபரணங்கள்தாம் பூண்டிருந்தனள். அவ்வணிகள் அச்சுந்தரியின் இயற்கை யழகை எடுத்துக் காட்டிற்றே யன்றி மறைத்தலைச் செய்யவில்லை. அவளுடம்பு வெண்மையான பனிக்கட்டியினும் பளபளப்பாக விளங்கிற்று. தன் கரிய கூந்தலை விரித்து ஆற்றிக்கொண்டிருந்த அங்கங்கையர்க்கரசி கழுத்தை வளைக்குந்தோறும் அவள் கூந்தல் நிலத்தை முகந்து முத்தமிட்டது. அவளுக்கு வயது உத்தேசம் பதினேழு இருக்கலாம். அவள் கருணைக் குறைவிட மென்பதைக் கண்கள் காட்டின. மதுரபாஷிணி யென்பதைச் செவ்வாய் விளக்கிற்று. அவள் சாயலைக்கண்டு மயில்கள் நேயமுற்றன. குயில்கள் குரலுக் குடைந்தன. மழலையைக் கிளிகள் பழகின. பெடை

யன்னம் நடையை விரும்பிப் புடைபெயர்ந்தன. அவள் முகமலர்ச்சியும், கண் பார்வையும் விரும்பிய வரங்களை வித்தியாசமின்றிக் கொடுப்பனபோலத் தெய்வவொளி கொண்டு விளங்கின.

தருமம் தவறுதவனும் புலன்களை வென்றவனுமான சந்தனுமன்னவன் அச்சுந்தரியைக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தான். அவன் உடல் புளகித்தது. அவள் அழகை முழுவதும் பருகிவிடுபவன் போல நெடுநேரம் வரையில் பிரமித்துப் பார்த்துக்கொண்டு நின்றான். அவன் கண்கள் ஆசை மிகுதியினால் இமைத்தலை இழந்தன. 'காதலி மிக்குழிக் கற்றவும் கைகொடா' அவன் தனது உண்மையறிவை ஒருங்கே யிழந்து விட்டனன்.

அப்பெண்ணணங்கு அரசனைக்கண்டதும் நாணத்தினால் இணங்கி அப்புறம் செல்லத் தொடங்கினள். ஆனால், அவள் பாதங்கள் பெயர்ந்தனவே யன்றிக் கண்ணும் கருத்தும் அரசனைவிட் டகலவில்லை. அவள் தன் இயற்கை யழகாலும், நடை உடைகளாலும் அரசன்மனத்தையும் அவன் ஐம்பொறிகளையும் அப்படியே அபகரித்துக்கொண்டனள். அரசனுடைய அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்ற அருங்குணம் நான்கும் இருந்தவிடம் தெரியாமற் பறந்து போயின.

சந்தனு மன்னவன் தன்னை ஒருவாறு தைரியப்படுத்திக்கொண்டு அவளைச் சமீபித்து "அழகுள்ளவளே! நீ தெய்வ ஜாதியில் எந்த வகுப்பைச் சேர்ந்தவள்? திருமகள் பிறப்பினால் பாற்கடல் பெருமை பெற்றது போல உன்பிறப்பினால் எந்தக்குலம் பிரகாசிக்கின்றது? என் கண்கள் என்னை மோசஞ் செய்யாதிருந்தால் நீ கர்ப்பவாசம் செய்தறியாத கன்னிகையாக இருக்க வேண்டும். நான் அரம்பை மேனகை முதலான தெய்

வப் பெண்களையும், அழகிலும் அடக்கத்திலும் உயர்ந்த பல தேசத்து மானிடப் பெண்களையும் பார்த்திருக்கிறேன். அவர்கள் உனக்குமுன் ஆதித்தன் எதிரிற் காணும் மின்மினியினும் ஒளி மழுங்குகிறார்கள். நீ தெவிட்டுதலில்லாத அழகைப் பெற்றிருக்கிறாய். உன் அழகு என் கண்களைக் கூசச்செய்கின்றது.

"கன்னியேயாம் எனின் கடிகொள் பான்மையை
என்னின்மற் றுயர்ந்தவர் இல்லை மண்ணின்மேல்
உன்னினை வரையென உசாவினான் இகல்
மின்னிலை வடிகொள்வேல் வேந்தர் வேந்தனே"

வில்லிபுத்தூரர்.

நீ என் பெயரைக் கேள்வியுற்றிருக்கலாம். நான் சந்திர வம்சத்திற் பிறந்தவன். என்னைச் சந்தனுவென்று சொல்வார்கள். உலகத்தில் உள்ள எல்லா அரசரும் எனக்கு அடங்கி நடந்துவருகின்றனர். நான் பொய் சொல்லி உன்னை ஏமாற்றவில்லை. இவ்வுலகத்தில் என்னை ஒப்பாரும் அல்லது மிக்காரும் ஒருவரும் இல்லை. உன்னை என்விருப்பத்தை நிறைவேற்றவந்த ஒருதேவதையென்று நினைக்கிறேன். உனக்குக் கணவனாகும்படியான பாக்கியத்தைப் பெறுவேனாயின் நான் உலகத்தில் தன்னியனாவேன். நீ மனைவியாவதைக்காட்டினும் எனக்கு உயர்ந்த பாக்கியம் வேறில்லை. அழகுள்ளவளே! என்மீது கருணைகொள். நான். உனக்குச் செய்யும் பணிவிடைகளை அங்கீகரி. உன்னை யாசிக்கிறேன். என்விருப்பம் நிறைவேறட்டும். என்னுடன் இரு" என்று சொன்னான்.

## அதிகாரம் 3

### மணம்

" நாணினள் ஒதுங்கினள் நதிமடந்தையும்
பூணுறு மார்பகம் பொருந்த நோக்கினள்
சேணுறை தனதுமெய்த் தேசு போல்நங்கை
வாணிலா வெழச்சில வாய்மை கூறுவாள். "

வில்லிபுத்தூரர்.

அந்தக் கட்டழகி அரசனுடைய அவ்விரப்பு மொழிகளைக்கேட்டு நாணத்தால் தலை கவிழ்ந்து ஒருபுறம் ஒதுங்கினள். புன்முறுவல் பூத்தனள். கடைக்கண்ணால் நோக்கினள். பிற்பாடு ஒருமரத்தின் மறைவில் நின்றுகொண்டு " பாரதரே! நான் தங்களைக் கேள்வியுற்றிருக்கிறேன். நான், கற்புநிறைந்த கன்னிகைதான். தங்களுக்குப் பட்டமகிஷியாவதில் எனக்கு விருப்பம் உண்டு. இரண்டொரு நிபந்தனைகளுக்கு ஒப்புக்கொள்வதானால் தங்கள் விருப்பத்தை அங்கீகரிக்கிறேன் " என்று சொன்னாள். அவள் வசனம் அரசனுக்குச் சந்தோஷத்தைத் தந்தது. அவன் " அன்புள்ளவளே! உன் நிபந்தனையை வெளியிடு. நான் அங்கீகரிக்கிறேன். எனது உடல், பொருள், ஆவி முதலியன்வை உன் வசமாகிவிட்டன. அவற்றை உன் இஷ்டப்படி உபயோகித்துக்கொள். உன் முன்னர் மோக்ஷமும் எனக்குப் பெரிதன்று " என்று கூறினான்.

அந்தச் சுந்தராங்கி " தருமம் தெரிந்தவரே! தாங்களாவது அன்றிப் பிறராவது என் வரலாற்றைத் தெரிந்துகொள்ள விரும்பலாகாது. நல்லதாயினும் கெட்டதாயினும் நான் விரும்பிச்செய்யும் காரியங்களைத் தடுக்கலாகாது, அங்ஙனமே எனக்கு விருப்பமற்ற வசனங்களை என்முன் சொல்லலுமாகாது. இவை என் நிபந்தனை

இம்மூன்றுக்கும் தாங்கள் உடன்பட்டால் தங்களுக்கு மனைவியாகச் சம்மதிக்கிறேன்" என்றாள்.

சந்தனு "புன்சிரிப்புள்ளவளே! அகத்தினழகு முகத்தில் தெரியும். நீ பத்மினி வகுப்புப் பெண்களுக்கும் இருந்திருக்கமுடியாத பரிசுத்த இலக்கணங்களைப் பொருந்தி விளங்குகின்றனை. ஒரு சக்ரவர்த்திக்குப் பட்டமகிஷியாகும் உயர்ந்த குணங்களை உன்னிடத்தில் சம்பூர்ணமாய்க் காண்கிறேன். நீ என் அன்புக் குரியவளாயினை. இனி உனக்கு ஒன்றையும் ஒளிக்கவேண்டியதில்லை. சில வருஷங்களுக்கு முன்னர் என்பிதாவினால் எச்சரிக்கப்பட்டிருக்கும் இரகசியமொன்று நினைவுக்கு வருகின்றது. அதனை உனக்குச் சொல்கிறேன். அவர் என்னைநோக்கி 'அன்புள்ள சந்தனு! முனிவர்களால் மதிக்கப்பெற்றவளும், அழகிலும் ஒழுக்கத்திலும் நிகரற்றவளுமான ஒரு தேவப்பெண் உன்புகழை விரும்பி இனியொரு சமயத்தில் உன்னிடம் வருவாள். நீ அவளை ஆக்ஷேபணையின்றி அங்கீகரித்துக்கொள். அவள் வரலாற்றை அறிய விரும்பாதே. அவள் எளிதில் கிடைக்கத்தக்கவளன்று; இஃது என் கட்டளை' என்று சொல்லியிருக்கிறார். மயில்போன்றவளே! நான் உனக்கு அப்பிரியத்தைச் செய்யமாட்டேன். நீ நிச்சயமாக நம்பு" என்று சொன்னான். அப்பெண்மணி "புருஷச்சிரேஷ்டரே! நான் சந்தோஷிக்கிறேன். சந்திரவம்ச சக்ரவர்த்திகள் சத்தியம் தவறமாட்டார்கள். ஒருகால் தவற நேருமாயின் தங்களைப் பிரிய நேரிடுமென்று மறுபடியும் நினைப்பூட்டுகிறேன்" என்று சொல்லி அந்நிருபர் தலைவனுக்கு நாயகியானாள். அரசன் அவளைத் தேரிலேற்றிக்கொண்டு பட்டணம் வந்து சேர்ந்தான். அவள் தன் ஒழுக்கத்தாலும் உபசாரத்தாலும் சந்தனுமன்னவனையும் அரண்மனையிலுள்ள மற்றவர்களை

யும் சந்தோஷப்படுத்திவந்தாள். அப்பெண்மணி யார் தெரியுமா? அவள்தான் எல்லா உலகங்களையும் தூய்மை செய்து வளர்க்கும் கங்கை. அத்தெய்வ சுந்தரியை நாயகியாகப்பெற்ற சந்தனுமன்னவன் அவள் சிநேகத்தாலும், சாதுரியத்தாலும், முகமலர்ச்சியாலும் முற்றிலும் கவரப்பட்டவனானன்.

## அதிகாரம் 4

### வாழ்க்கை

"காதன் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி யென் முகத்தாய்! நோக்குமால்
கண்ணிரண்டும் ஒன்றையே காண்."
சிவப்பிரகாசர்.

அரசர் தலைவனான அம்மன்னவன் அநேக வருஷம் வரையில் அருந்ததிக்கும் கற்பிலக்கணத்தைக் கற்றுக் கொடுக்கும் கங்காதேவியுடன் இல்லறம் நடத்தி வந்தான். கங்கை அவனைச் சகலவிதத்திலும் சந்தோஷப்படுத்தினாள். அத்தம்பதிகளின் ஐக்கியத்தைக்கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டனர். பட்டணவாசிகள் பலரும் கங்கா சந்தனுக்களைத் திருமகளும் திருமாலுமாக மதித்துப் புகழத் தொடங்கினர். உயர்ந்த சபைதோறும் அவர்கள் கீர்த்தி அதிகமாகப் பேசப்பட்டது. அவர்கள் அரண்மனைகளிலும், வனங்களிலும், சோலைகளிலும், செய்குன்றுகளிலும் தங்கியிருந்து பருவகால இன்பங்களை அநுபவித்து வந்தார்கள். தினந்தோறும் புதிது புதிதாக விளங்கும் கங்காதேவியின் இயற்கையழகை எவ்வளவு பருகியும் ஆறுதலடையாத அரசனைப்போலவே சந்தனு மன்னவனது சிறந்த குணங்களைத் தினமும் பருகியும் கங்காதேவிக்கும் ஆவல் தணியவில்லை.

சிலவருஷங்களுக்குப் பிற்பாடு கங்காதேவி கர்ப்ப வதியானாள். அரசனும் அரசச்சுற்றமும் அதனைக்கேட்டு அகம் களித்தனர். தனது அன்புக்குரிய மனைவி அழகின் கனியென்னும்படி அரும்புதல்வனைப் பெற்றுத் தருவா ளென்று சந்தனுமன்னவன் இரவும் பகலும் எண்ணி யெண்ணி இன்புற்றிருந்தான். கர்ப்பமும் வளர்பிறை யென்ன வளர்ந்துவந்தது. கர்ப்பகாலத்திற் செய்யும் எல்லா வைதிக லௌகிகச் சடங்குகளும் சரியாக நிறை வேறின. பின்னர் நன்முகூர்த்தமொன்றில் பட்டமகிஷி புத்திரனைப் பெற்றாள்.

" ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்."
ஔவையார்.

காலம் மாறுகின்றது. எண்ணங்கள் பெருகுகின்றன. நமக்குத் தெரியாதவொன்று நம்மை நடத்திவருகின்றது. அதற்கு உருவம் இல்லை. நிறம் இல்லை. பிறப்பு இல்லை இறப்பும் இல்லை. எப்படிப்பட்ட தீரரும் அதன் முன்னர் அடங்கி விடுகின்றனர். தவம், தானம், அரசு, ஆண்மை முதலிய எவற்றாலும் அதனை வசப்படுத்த முடியாது. அஃது நமக்கு ஒருசமயத்தில் ஊக்கத்தைக் கொடுக்கும். மற்றொருசமயத்தில் ஊக்கத்தை அழிக்கும். ஒருசமயத் தில் எண்ணத்தை நிறைவேற்றும். மற்றொரு சமயத்தில் அவ்வெண்ணத்தைச் சிதறவடிக்கும். இஃது அதற்கு என்றுமுள்ள வியற்கை.

அடிமைப் பெண்களும் மருத்துவப் பெண்களும் பிறந்தகுழந்தையின் பிரகாசத்தைக் கண்டு மகிழ்ந்து அரச னுக்கு அறிவித்தார்கள். மன்னவன் ஆனந்தக்கடலில் அமிழ்ந்தமுழுகி அவர்களுக்கு வெகுமதியளித்து ஆடம்

புரத்தோடு நீராடச்சென்றான். அவன் மனம் குழந்தையைப் பார்க்கக் குதூகலித்தது.

பட்டமகிஷி பிரஸவ அறையில் இம்மியும் இரக்கமில்லாமல் குழந்தையின் கழுத்தை முரித்துக் கங்கையில் எறிந்துவிட்டனள். அடிமைப்பெண்கள் அந்தக் கொடுஞ்செயலைக் கண்டு நடுங்கிப்போனார்கள். அதனை அவர்களுக்கு வெளியிற் சொல்லவும் நாவெழவில்லை. ஒருவரை யொருவர் பார்த்து விழித்துக்கொண் டிருந்தனர். அரசன் ஸ்நானம்செய்து சுத்தமாகி அந்தணர்களையும் அமைச்சர்களையும் அழைத்துக்கொண்டு அந்தப்புரம் வந்தான். அங்குக் குழந்தையைக் காணும் ஏற்பாடுகளில் ஒன்றும் செய்திருக்கவில்லை. அனைவர் முகத்திலும் அச்சமும் துக்கமும் அதிகரித்திருந்தன. அவன் கலவரப்பட்டு மெள்ளமெள்ள அதன் காரணத்தை அறிந்துகொண்டான்.

மனைவியின் கொடுஞ்செயல் அரசனுக்குச் சம்மதமாகுமா? என்னசெய்யலாம்! அவன் இலவுகாத்த கிளியானான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தான் உலகத்தில் ஒருவிதமான தீச்செயலையும் செய்யாதிருக்கும்பொழுது கடவுள் தனக்குத் தண்டனை விதித்தது சரியாகுமாவென்று சந்தேகங்கொண்டான். அவன் 'பரந்த உலகத்தில் பாபம் பெருகினாலன்றிப் பிறந்த குழந்தைகள் இறவா. கொற்றவன் கொடுங்கோலும் குடிகளின் கூடாவொழுக்கமும் பாபத்தை வளர்க்கும் கருவிகள். நம் ஆளுகையில் அவ்விரண்டும் நிச்சயமாக இல்லை. நாட்டின் நான்கு பக்கங்களிலும் நல்லொழுக்கமே நிறைந்து நிற்கின்றது. 'நெஞ்சையொளித்தொரு வஞ்சகம் இல்லை.' மனம், மொழி, மெய் யென்ற மூன்றிலும் நாம் மறுவற்றிருக்கிறோம். மனைவியின் குணங்களும் மாசற்றவை. இத்தனையிருந்தும் இளஞ்சிசுவுக்குத் துன்மரணம் சம்பவித்திருக்கின்றது. அக்கொடுஞ்

செயல் புரிந்தவளும் கோப்பெருந்தேவி. அதனினும் பெற்றதாய். இதற்கு என்னசெய்யலாம்?' என்று பலவிதமாக எண்ணமிட்டான். அத்தருமவரசன் அவ்விஷயத்தைப்பற்றித் தன் மனைவியை ஒன்றும் வினவவில்லை. தந்தையின் கட்டளையும் தன் வாக்குத்தத்தமும் அவனைக் கேட்கவொட்டாமல் தடுத்தன. சிலநாள் குழந்தையின் மரணத்துக்குத் துக்கம் கொண்டாடினான். 'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ ?' நாள் செல்லச்செல்லத் துக்கம் குறைந்தது. புத்தழகுடைய தனது பிரிய மனைவியின் காந்தியில் அறிவிழந்து மீட்டும் அவளை முன்போலக் காதலிக்கத் தொடங்கினான். 'குழிப்பிள்ளை மடியில்' என்பது நிச்சயமல்லவா ? அடுத்த வருஷத்தில் அவன் மனைவி இரண்டாவது கர்ப்பமடைந்தாள். அந்தப் புத்திரனையாவது அநுக்கிரகிக்கும்படி சந்தனுமன்னவன் தெய்வங்களைத் தோத்தரித்தான். தேவாலயங்களுக்குத் திருவிழா முதலான சிறப்புக்களைச் செய்தான். கர்ப்பம் முதிர்ச்சிபெற்றது. ஆனால், அரசன் எண்ணம் மாத்திரம் அங்ஙனம் முதிர்ச்சிபெறவில்லை. அவன் மனைவி அந்தக் குழந்தையையும் முன்போலவே கொன்று கங்கையில் எறிந்துவிட்டாள். அந்தோ ! பரிதாபம்!! என்ன செய்வான் ? அவன் மனத்தில் வருத்தக் கடலும் சினத்தீயும் மாறிமாறிப் பரந்தும் வளர்ந்தும் பெருகின. மனைவியைத் தள்ளிவிட்டு அவ்விரண்டையும் சாந்தப்படுத்த வொட்டாமல் தருமம் படுதண்டாவாக அவனைப் பெயரமுடியாதபடி இடையில் நின்று தடுத்தது. குழந்தை இறந்த துக்கம் மனைவியின் முகத்துக்கு முன் னிற்கவில்லை. பகலும் இரவும் போல இன்பமும் துன்பமும் அவ்விறைவன் மனத்தில் மாறிமாறித் தோன்றிக் கொண்டிருந்தன. முடிவாய்ச் சொல்வோமானால், அவன்

மனைவி அவனுக்கு ஏழு குழந்தைகளைப் பெற்று எல்லாவற்றையும் கங்கைக்கு இரையாக்கினாள்.

## அதிகாரம் 5

### பழிப்பு

"மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும் — கழிமுடைப்
புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்
சென்றுரைக்கும் சேயார் முகத்து." குமரகுருபரர்.

இருவர் அறிந்த இரகசியம் இல்லை. தெய்வப் பிறப்பும் தெய்வத் தன்மையுமுடைய இந்திரன் முதலியவர் எப்பொழுதோ செய்த இரகசியச் செயல்கள் இன்னமும் அழியாமல் அக்ஷரவடிவங்களை அடைந்திருக்கின்றனவல்லவா? அத்தினபுரத்தின் அரண்மனையில் நடந்த அந்த இரகசியம் மெள்ளமெள்ள அவனியில் பரவத் தலைப்பட்டது. காலத்துக்குத் தக்கபடி எண்ணங்கள் மாறுகின்றன. அதற்குக் காரணம் கூறமுடியாது. அஃது இவ்வுலகத்துக்கு என்றும் உள்ள இயற்கை. முன்னர்ப் பட்டமகிஷியின் பெருங்குணங்களைப் புகழ்ந்து சொன்ன பலரும் இப்பொழுது அவள் கொடுஞ்செயலைக் கேட்டு நெஞ்சம் துடிக்கலாயினர். அவளைப் பிசாசங்களின் வகுப்பென்றும், கொடுமைசெய்யும் கோர ராக்ஷஸி யென்றும், அரசையும் அரசனையும் அடியோடு விழுங்கவந்த அகோர வீர பத்ர காளி யென்றும் பலவாறு பேசினர். சிலர் ஊர் பேரில்லாத ஒருத்தியை அழைத்துவந்து பட்டமகிஷி யாக்கிக் கொண்ட பார்த்திபன் செயலுக்குப் பரிதபித்தனர். சிலர் இனியேனும் அவளை அடித்துத் துரத்தினால் உலகம் சீர்ப்படும் என்று சலிப்பாய்ச் சொல்லினர். சிலர் உலகத்தை

ஒரு குடையில் ஆண்டுவரும் சக்ரவர்த்தியை முற்றிலும் மயக்கி வசப்படுத்திக்கொண்ட மனைவியின் சாமர்த்தியம் சிறந்ததென்று புகழ்ந்துகொண்டனர். பெருந்தன்மையில்லாப் பேதைமாரிற் சிலர் தங்கள் வீட்டுச் சண்டைகளில் "அரசர் மனைவி செய்யும் குற்றத்தைக் காட்டினும் எங்கள் குற்றம் என்ன அதிகமாகி விட்டது? அந்தோ! ஏழு குழந்தைகளைப் பெற்று எல்லாவற்றையும் கொன்று கங்கையில் எறிந்த தம் மனைவியைத் தள்ளமுடியாமல் ஒரு தருமவரசர் இன்னமும் அவள்மீது அன்பு கொண்டுவருகிறார். நாங்கள் அப்படிப்பட்ட மகாபாதகங்களில் என்ன செய்துவிட்டோம்? ஒன்றும் செய்யாதிருக்கையிலேயே எங்களைத் தூற்றித் தெருவில் வைக்கிறீர்கள். இஃது உங்களுக்கு ஞாயமன்று' என்று நீதி சொல்லலாயினர். அறிவில்லாத ஆண்மக்களிற் சிலர் மனைவிகளைக் கோபிக்குங்கால் 'கொண்டமனைவியின் கொடுஞ்செயலைக் கண்ணாரக் கண்டும் அவளை அதட்டியோட்ட வகையில்லாமல் விழித்துக் கொண்டிருக்கின்ற சந்தனுமன்னவர் என்று எங்களையும் எண்ணிவிட்டீர்கள் போலும்; நாங்கள் அரைக்கணமும் அப்படிப் பொறுத்திருக்கமாட்டோம். எங்களுக்கு உயிரினும் மானஞ் சிறந்தது' என்று பராக்கிரமம் பேசினர்.

இங்ஙனம் நாட்டில் உள்ள நான்கு வருணத்தவரும் அரசனையும் அரசியையும் பழித்துப் பேசலானார்கள். அறத்தின் வேலியான மன்னவன் அவ்வபக்கியாதியை அறியாமல் இருக்கவில்லை. மனைவியின் கொடுஞ்செயலினால் அவன் பெரும்பாலும் வெளியிற் புறப்படுவதையே நிறுத்தி விட்டான். விதியில்லாத காரியங்களுக்கன்றி மந்திரி முதலானவர்களுக்கும் காட்சியளிப்பதில்லை. பட்டமகிஷியினாலுண்டான தலையிரக்கம் அவனுக்குப் பெரிய பாரமாகிவிட்டது. அநேக நாள் தன் மனைவியை 'நீ

ஏன் சிசுக்களைக் கொலைசெய்கிறாய்' என்று கேட்க முடியாதிருக்கும் தன் வாக்குத்தத்தத்தையும் தந்தையின் கட்டளையையும் எண்ணியெண்ணிக் கண்ணீர் சொரிவான். தன் குற்றம் நீக்க முடியாதிருக்கையில் பிறர் குற்றங்களை விசாரித்துப் பூர்த்திசெய்வது எங்ஙனமென்று சிலசமயம் பெருமூச்செறிவான். சிசுவதைசெய்ய வுடன்பட்டிருக்கின்ற தான் இனிச் சிங்காதனத்தில் வீற்றிருப்பது சிறப்பல்லவென்று சிலசமயம் பொருமுவான். நிமிஷந்தோறும் வளர்ந்து பெருகும் அபக்கியாதியை எவ்விதம் அகற்ற முடியுமென்று சிலசமயம் யோசிப்பான். அரசர்க்கரசனான சந்தனுமன்னவன் இவ்விதமாக இரவும் பகலும் கண்ணீரினால் தன் படுக்கையை நனைத்துக் கஷ்டப்பட்டு வந்தான். அவன் அன்புக்குரிய மனைவியிடத்தில் குழந்தையைக் கொல்லுதலாகிய அவ்வொரு கொடுஞ்செயலை யல்லாமல் வேறு துர்க்குணம் இருக்கக் காணவில்லை. அந்தக் கட்டழகியும் தன் ஆருயிர்த் தலைவனிடம் அன்பு குன்றாமல் அவனைத் தனது அறிவின் முதிர்ச்சியாலும், உபசரணையாலும், சம்பாஷணையாலும் சந்தோஷப்படுத்துவதில் பின்வாங்கவில்லை.

“பாலுக்குச் சர்க்கரை யில்லையென் பார்க்கும், பருக்கையற்ற
கூழுக்குப் போட வுப்பில்லையென் பார்க்கும், குற்றிதைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்கும், கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென்பார்க்கும், விசனம் ஒன்றே.”

தனிப்பாடல்.

துக்க முள்ளவனுக்கும் சந்தோஷ முள்ளவனுக்கும் நாள் சரியாகவே கணக்காகின்றது. சிலருக்கு இரவு அதிகமாகவும், சிலருக்குப் பகல் அதிகமாகவும் இருக்க விருப்பம். நோய்க்கு உடம்பையும், விசாரத்துக்கு மனத்தையும் உள்ளாக்கின் சிலருக்கு இரவும் பகலும் இல்லா

மலேயிருக்க விருப்பம். இவர்கள் சம்மதப்படி இரவும் பகலும் இருக்கமுடியுமா? அவை ஒருவரையும் அபிப்பிராயம் கேட்பனவல்ல. அவ்விரண்டும் நிமிஷம் பெருகுவதும் இல்லே. நிமிஷம் சிறுகுவதும் இல்லே. ஏற்றக்குறைவில்லாமல் என்றும் ஒரேதன்மையாக இருந்துவருகின்றன. எப்பொழுதோ நளாயனியென்பவள் மாத்திரம் ஐந்துநாள் வரையில் உலகத்தை இரவாகவே செய்துவிட்டாளென்று கேள்வியுற்றிருக்கிறோம். அதற்குப்பின் ஒவரும் அப்படிச் செய்யவில்லே.

சந்தனுமன்னவன் காலம் சந்தோஷத்திலும் விசாரத்திலுமாகச் சென்றது. மாறுந் தன்மையுள்ள அவன் மனம் ஒரு விபரீதமான கண்ணுடியாக இருந்தது. கண்ணுடி எதிரிலுள்ள பொருளே இப் படிப்பட்டதென்று எடுத்துக் காட்டும். அவன் அன்புள்ள மனேவி எதிரிலிருக்கும்போது அவள் குற்றத்தில் அணுவும் அவனுக்குத் தோன்றுவதில்லே. அவள் மறைந்ததும் சிசுக்கொலேச் சம்பவங்கள் மலேயைப்போல அவன் மனத்தில் வளர்ந்து பெருகி வாதனைசெய்யும். இதற்குக் காரணம் சொல்வார்யார்? உலகத்துக்கு இது புதுமையன்று. இது மனித வியற்கை. ஆனுல், உண்மையைத் தெரிந்துகொள்ளாமல் உலகம் ஏன் ஒருவனே வெறுக்கத் தொடங்குகின்றது? உண்மைதான். அதற்காக நாம் உலகத்தை வெறுக்கமுடியுமா? அது பெரும்பாலும் உண்மையைத் தான் உரைக்கும். இணே பிரியாமற் பழகிவரும் பார்த்திபனுக்கே அவன் மனேவி குழந்தையைக் கொல்வதற்குக் காரணம் தெரியவில்லே யென்ருல், வெளியிலுள்ளவர்க்கு எங்ஙனம் தெரியமுடியும்? ஒன்றல்ல, இரண்டல்ல; அம்மம்ம! ஏழு இளஞ் சிசுக்களேக் கொன்றிருக்கின்றனள். அக்கொலேகளில் ஒன்றை அவளல்லாமல் நாட்டில் வேறு எவரேனும் செய்திருந்

தால், அந்தோ! அவர்கள் அக்கணத்திலேயே மரணதண்டனைக்கு உள்ளாயிருப்பார்கள். அரண்மனையில் அமர்ந்திருந்தும், தன்மனைவியின் பரிகாரமற்ற பெருங்குற்றத்தை விசாரிக்கமுடியாமல், ஒரு மன்னர் மன்னன் விழித்துக் கொண்டிருக்கிறான். இதற்கு என்ன செய்யலாம்? மிகவும் தாழ்ந்த நிலைமையிலிருக்கும் ஒரு ஏழைக்குடியானவன் கூடத் தன் மனைவியை அடக்கி யாள்கிறான்.

சந்தனுமன்னவன் தனித்திருக்கும் சமயங்களில் 'பரம்பொருளே! என்செயல் எல்லாவற்றையும் தங்கள் திருவுள்ளத்துக்கு ஒப்படைத்து விட்டேன். எப்படியாவது என்னைப் பரிசுத்தனுக்குங்கள்' என்று இரவும் பகலும் எண்ணமிட்டு வருந்துவான். இந்தப் பரந்தவுலகம் அவரவர் வினைக்குத் தக்கபடி சந்தோஷமும் துக்கமுமாக விளங்கிவருகின்றது. இங்ஙனம் சில மாதங்கள் சென்றன. பகீரதி எட்டாவது முறை கர்ப்பம்அடைந்தாள். உலக வசை அரசனை நாற்புறமும் நெருங்கி நின்று வாதிக்கத் தொடங்கிற்று. அவன் அதனைச் சிறிதும் வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் வருங்காலத்தை எதிர் பார்த்துக்கொண்டிருந்தான். முடிவில், அவன் அன்புக்குரிய மனைவி நல்ல முகூர்த்தத்தில் அழகே வடிவெடுத்ததுபோன்ற ஓர் அரசிளங் குமாரனைப் பெற்றாள். அக்குழந்தையின் ஒளியினால் அவ்வறை முன்னிலும் அதிக பிரகாசமுள்ளதாக விளங்கிற்று. புத்திரனை எதிர்பார்த்திருந்த இறைவனுக்கு மனைவியின் பிரசவச்செய்தி அடிமைப் பெண்களால் அறிவிக்கப் பட்டது.

உடனே அம்மன்னவன் மனைவியின் பிரசவ விடுதிக்குச் சென்றான். ஆதிநாளில் கங்கைக்கரையில் அவளுக்குச் செய்துகொடுத்த சத்தியத்தையாவது அன்றித் தந்தை அவளுக் கிட்டுப்போன கட்டளையையாவது அவன்

கொஞ்சமும் பொருள்பண்ணவில்லை. அவன் மனம் உலக நிந்தையைமாத்திரம் உறுதியாக்க் கொண்டு நின்றது. எப்படிப்பட்ட தெய்வப்படைகளுக்கும் அஞ்சாத அவனது கல்நெஞ்சம் அப்பொழுது படபடவென்று அடித்துக் கொண்டது. தந்தை கட்டளையும் சத்தியமும் ஒருபுறம் இழுக்கச், சிசுக்கொலையும் உலகவசையும் மற்றொருபக்கம் வலிக்கப், பிசாசம் பிடித்தவன் போலவும் மருள்கொண்டவன்போலவும் அவன் அவ்வறைக்குள் நுழைந்து நின்றான்.

## அதிகாரம் 6

### பிரார்த்தனை

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற".

திருவள்ளுவர்.

கங்காதேவி அரசன்வருகைக்கு ஆச்சரியப்படவில்லை. அவன் வருவானென்று அவளுக்கு நன்றாகத் தெரியும். அவள் நிதானமாகத் 'தருமம் தெரிந்தவரே! இஃது என்ன ஆச்சரியம்? கீர்த்தியை விரும்புகின்றவர் பிரஸவ அறைக்குள் பிரவேசிக்கமாட்டார்கள். அசங்கியங்களையும் கவனியாமல் வந்தபடியினால் அஃதொரு அவசியமான காரியமாக இருந்தே தீரவேண்டும். ஆதலின், காரியத்தைச் சொல்லுங்கள்' என்றாள். அப்பொழுது அவள் கரத்தில் பிறந்த குழந்தை பிரகாசித்துக்கொண்டிருந்தது. அதன் அழகு அரசன் மனத்தை அடியோடு கவர்ந்துவிட்டது.

அவன் மிகவும் எளிய முகத்தோடு "அன்புள்ளவளே!

"நிறுத்துக மாயினை நிலைபெறும்படி;
வெறுத்தெனை முனியினும் வேண்டுமொலிது;
மறுத்தனன் யானென மனஞ்செய்யாது, இனிப்
பொறுத்தருள் புரிக இப் புதல்வன் தன்னையே."

வில்லிபுத்தூரார்.

குலவிருத்தியின் பொருட்டு நான் இந்தச் சிசுவை யாசிக்கிறேன். உன்னில் அன்புள்ளவனும், உனக்குத் தலைவனும், சக்ரவர்த்தியுமான எனக்கு இந்த வரத்தைக்கொடு! பொதுநன்மைக்காக நூறுகிணறுகள் உண்டாக்குவதைக்காட்டினும் ஒருகுளம் வெட்டுதல் சிறந்தது. நூறுதடாகப் பிரதிஷ்டையைக்காட்டினும் ஒரு யாகம் உயர்ந்தது. நூறுயாகங்களாற் பெறும்பயன் ஒரு சற்புத்திரனாற் கிடைக்கும். அப்படிப்பட்ட ஏழுபுத்திரர்களை நீ கருணையில்லாமற் கொன்றிருக்கிறாய்.

> "எப்பணியால் இன்புறுவர் காதலர் அக்காதலரை
> அப்பணியால் அப்பொழுதே யன்புறுத்தி—ஒப்ப
> மனம்குழையும் வண்ணம் மகிழ்விப்ப தன்றே
> கனங்குழையார் தங்கள் கடன்." பெருந்தேவனார்

உத்தமப் பெண்கள் உன் ஒழுக்கத்தைப் பின்பற்றும்படியான உயர்ந்த நிலைமையி லிருக்கின்றனை. எல்லாச் சாஸ்திரங்களையும் கசடறக் கற்றிருக்கின்றனை. செல்வம், செல்வாக்கு, அழகு, அறிவு, ஒளி, ஒழுக்கம் என்ற பலவற்றிலும் நீ பெருமை பெற்று விளங்குகின்றனை. அவ்வளவிருந்தும் நினைக்கும்பொழுதே நெஞ்சத்தை நடுங்கச் செய்கின்ற குழந்தைகளைக் கொல்லும் குரூரமனத்தினை கொண்டிருப்பதற்குக் காரணம் தெரியவில்லை. குழந்தைகளைக் கொல்லும் கொடுஞ் செயல் ஒன்றையல்லாமல் நீ எனக்குப் பிரியமில்லாதவற்றை நினைந்தாவது, சொல்லியாவது, செய்தாவது இருப்பதாக எனக்கு ஞாபகம் இல்லை. புகழுள்ளவளே! ஆண்மக்களின் அறிவு வெளியில்மட்டும் பயன்படும். பெண்மக்களின் அறிவு கர்ப்பத்திலுள்ள சிசுக்களையும் கல்விக் களஞ்சியமாக்கும். ஒரு பெண் கருத்தரிக்கும் காலையில் எவ்விதமான பாவனையை அடைந்திருக்கின்றனளோ அவ்விதமான உருவமே அவ

ளிடத்தில் உற்பத்தியாகின்றதென்பார்கள். கர்ப்பவதியான பெண்ணின் ஒழுக்கம் பிறக்கும் சிசுவுக்கும் பொருந்துகின்றது. தன் விருத்தத்தைக் கவனியாமல் பட்டினிகிடந்தும், பத்தியமிருந்தும் குழந்தையை வளர்ப்பதனால், தாயின் அன்பு சிறந்து பொலிகின்றது. ஆனால், உன்னிடத்தில் அஃதொன்றைமாத்திரம் கண்டிலேன். அணுவளவேனும் அஃது இருந்திருக்குமானால், அழகு வடிவெடுத்தது போன்ற எழு அருங்குழந்தைகளை அநியாயமாகக் கொன்றிருக்கமாட்டாய். அரண்மனையில் இரகசியமாக நடந்த சிசுக்கொலைச் செய்தி அவ்வியடங்கலும் பரவிப்போயிற்று. உனது இச்செய்கையினால், நான் சில காலமாக வெளியில் புறப்படுவதேயில்லை. அவமானத்தினால் என்தலை தொங்கிவிட்டது. சாதாரண மனிதர்களும் என்னைக்கண்டு ஏளனம் பண்ணுகின்றனர். யயாதி, பூரு, பரதன் முதலான புண்ணிய புருஷர் இருந்து அரசு நடத்தி வந்த சிங்காதனத்தில் நான் சிலகாலமாக வீற்றிருக்கவும் கூச்சமடைகிறேன். மனைவியின் கொலைத் தொழிலை அடக்கச் சக்தியற்ற நான் உலகத்தின் அக்கிரமங்களை எங்ஙனம் விசாரித்து நியாயம் நடத்துவேன்.

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்;
அதனால், நமர் எனக் கோல் கோடாது
பிறர் எனக் குணம் கொல்லாது
ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்களன்ன தண்பெருஞ் சாயலும்
வானத்தன்ன வண்மையும் மூன்றும்
உடையனாகி வின் பெருவிறல் வேந்தன்" புறநானூறு.

ஒழுக்கமுள்ளவளே! குற்றம் கண்டவிடத்தில் கொற்றவன் தண்டிக்கக் கடமைப்பட்டவனன்றோ! நான் உன் கொலைத்தொழிலைக் கண்டும் ஒன்றும் செய்யக்கூடவில்லை.

" அன்பு மறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது " திருவள்ளுவர்.

வாயிலுக்கு நிலையும் கதவும் இரும்பால் இயற்றப்படினும் தாழ் இல்லாத விடத்தில் அவை பலம் செய்யாத வாறுபோல, நல்லொழுக்கம் கணவனிடத்தன்பு முதலியவை உன்னிடம் குறைவின்றிக் காணப்படினும் சிசுக்கொலையென்ற கொடுங்குணம் அவ்வெல்லாவற்றையும் கெடுத்து விடுகின்றது.

சிசுக்கொலைக்கு நீதிநூல்களில் பரிகாரம் புகலவில்லை. பிரியமுள்ளவளே ! பேய்களும் பெற்ற குழந்தைகளிடத்தில் பக்ஷம் காட்டுகின்றன. கொன்று தின்பதையே குலத் தொழிலாகக் கொண்ட சிங்கம், புலி, சிறுத்தை முதலிய கொடிய விலங்குகளுங் கூடக் குட்டிகளைப் பெற்றெடுத்துப் பாலூட்டி வளர்த்து வருகின்றன. எறும்புகளும் தங்கள் முட்டைகளை மேட்டு நிலங்களுக்கு எடுத்துப் போகின்றன. ஆனால், நீ மாத்திரம் பெற்ற குழந்தைகளைப் பக்ஷமில்லாமல் வதைத்து வருகின்றனை. எல்லாச் சாஸ்திரங்களையும் படித்திருப்பதனால் அறிவின்மையாற் செய்தாயென்று எண்ணவும் இடமில்லை. உன் கொலைச் செயலுக்குத் தகுந்த காரணம் இருந்தே தீரவேண்டும். அந்தோ ! இவ்வொரு தீய வொழுக்கம் மாத்திரம் உன்னைப் பற்றாதிருக்குமானால் இவ்வுலகத்தில் எனைப் போன்ற பாக்கியசாலி யிருக்கவே மாட்டான். கங்கைக் கரையில் 'நான் தங்களைச் சந்தோஷப்படுத்துவேன்' என்று ஆதியில் சொல்லிய வாக்குத்தத்தத்தை மறந்து விட்டனை! நீ செய்து வரும் காரியம் எனக்கு எவ்விதத்தில் சந்தோஷமுள்ளதாகும்? முதலில் மிகவும் அற்பமென்று அலக்ஷியம் பண்ணினவொன்று, பின்னர் மலையினும் பெரியதாகி வளர்ந்து அநேகம் பொல்லாங்குகளுக்குப் புதைய

லாகின்றது. நீ யார்? எவ்வகுப்பு? இக்கொலையினால் நீ அடையும் பயன் என்ன? பரிகரிக்க முடியாத உன்பாபத்தை எவ்விதம் நீக்கிக்கொள்ள விருக்கிறாய்? உண்மையை ஒளியற்க. அன்பற்றவன், வாக்குப் பொய்த்தவன் என்று என்னை நினையற்க. உண்மையை உரை. நான் அறிய விரும்புகிறேன்" என்று கூறினான்.

## அதிகாரம் 7

### பழங்கதை

"நகுதற் பொருட்டன்று நட்டல், மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு" திருவள்ளுவர்.

சக்ரவர்த்தியின் அன்பும் ஆண்மையுமுடைய அவ்வசனங்களைக் கங்கை அலக்ஷியம் பண்ணவில்லை. அவள் புன்முறுவல் செய்து "மன்னர் தலைவரே! தங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன். நான் இந்தக் குழந்தையைக் கொல்லவில்லை. ஆனால், வாக்குத்தவறிய தங்களிடத்தில் இனி நான் இருக்கமுடியாதென்பதைத் தங்களுக்கு நினைப்பூட்டுகிறேன். தாங்கள் பிறக்கு முன்னமே தங்கள் பிதா என்னைத் தங்களுக்கு மனைவியாகும்படி கேட்டுக் கொண்டனர். அதனைத் தாங்களும் ஒருவாறு அறிந்திருக்கிறீர்கள். நான் கட்டாயப்படுத்தவில்லை. எனக்கு அப்பிரியத்தைச் செய்யும்போது நான் தங்களைப் பிரிந்து போவேனென்று தங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். நான் பொய் சொல்லித் தங்களை ஏமாற்றவில்லை. நான் குற்றமற்றவள். என் ஒழுக்கம் தூய்மையுள்ளது. அதில் எவரும் குறை சொல்ல முடியாது. குழந்தைகளின் கொலைக்கு யார் பொறுப்பாளியென்று கேட்டீர்கள். நான் அக்கிரமம் பண்ணவில்லை. நியாயம் தான் செய்திருக்

கிறேன். அது சம்பந்தமாக எனக்குப் பாபம் கிடையாது. இஃதுண்மை. சக்ரவர்த்தியே! ஆதியிலேயே தாங்கள் என்னைத் தெரிந்துகொண்டிருக்கவேண்டும். அப்படிச் செய்ய மறந்து போனீர்கள். இப்பொழுது தெரிவதிற் பயன் யாது? ஆயினும், தங்கள் விருப்பத்தை மறுக்க வில்லை. என் வரலாற்றைச் சொல்கிறேன். அதில் கொலையின் காரணமும் விளங்கும்.

"கண்ணுதற் கடவுளின் கற்றைச் சடையில் வசிப்பவளும், தாரணி முழுவதும் தடையின்றிச் சஞ்சரிப்பவளும், தன்னிற் படிந்தவர் பாபங்களைப் பற்றறப் போக்குபவளும், தூயளுமான கங்கை என்று என்னை அறியுங்கள். பிரமன் சாபத்தையும் தங்கள் தவத்தையும் நினைந்து நான் இத்தனை நாளும் தங்களுக்கு மனைவியாக இருந்தேன். என்னால் இறந்துபோன குழந்தைகள் சிறப்புள்ளவரும் தேவச் சிரேஷ்டருமான அஷ்டவசுக்கள். அவர்கள் வசிஷ்டர் சாபத்தினால் அங்ஙனம் பிறந்தார்கள். அவர்களுக்குத் தந்தையாகும் தகுதியைத் தாங்கள் அடைந்திருந்தீர்கள். இதுதான் என் வரலாறு. இக்குழந்தை அவ்வஷ்டவசுக்களினுடைய அம்சத்திலுமிருந்து அவதரித்தது. இது கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் அனைவரையும் மிஞ்சி விளங்கும். தங்களுக்கு மங்களமுண்டாகட்டும். நான் சென்று வருகிறேன்" என்று சொன்னாள்.

சக்ரவர்த்தி ஆச்சரியப்பட்டுப் "பாகீரதி! பிள்ளைகளுக்கு மணப்பருவத்தில் மனைவியை நிச்சயிப்பது உலக வழக்கம். என் தந்தை தனயன் பிறக்குமுன்னரே அவனுக்கு மனைவியை நிச்சயித்தது விபரீதமல்லவா? உன் வசனத்தை நம்பச்செய். நீ எந்தக் காரணத்தினால் எனக்கு மனைவியாக வொப்பினை அவ்விஷயத்தை விவரமாகச் சொல்" என்றான்.

கங்கை "மஹாராஜாவே! தங்கள் பிதாவான பிரதீப மன்னவர் பனிமலையிலுள்ள என் உற்பத்தி ஸ்தானத்துக்கு வந்து அநேக வருஷங்கள் தவஞ்செய்து வந்தார். அவர் உண்மைத் தவமும் மெய்ம்மை யொழுக்கமும் எனக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணின. நான் ஒருநாள் அவர் வலத்துடையில் வந்து உட்கார்ந்தேன். அம்மன்னவர் 'புன்சிரிப்புள்ளவளே! நீயார்? உனக்கு நான் என்ன செய்யவேண்டும்?' என்று கேட்டார். "அரசத்தலைவரே! நான் ஜந்து முனிவர் புத்திரி. கங்கை என்று பெயர். என் யாற்றொழுக்கினால் தங்கள் நாட்டைச் செழிப்பித்து வருகிறேன். தங்கள் மீதுள்ள அன்பினால் இப்பொழுது கன்னிகையாகவும் வெளிப்பட்டு வந்திருக்கிறேன். என்னை அங்கீகரியுங்கள்" என்று சொன்னேன்.

அவர் "பாகீரதி! நான் வேறு வருணத்துப் பெண்களை விரும்பமாட்டேன். இஃது என் விரதம். இன்னும் எனக்கு ஏற்கனவே மனைவி இருக்கிறாள். ஏக பத்னீ விரதம் எவற்றினும் சிறந்தது" என்றனர். "அரசரே! நான் இழிகுலமன்று; உயர்குலம்; அதனிலும் தெய்வ வகுப்பு; என் புகழைத் தாங்கள் அறியாதிருக்கவில்லை; தங்கள் ஒழுக்கத்தை விரும்பி வலுவில் வந்தபொழுது என்னை நிராகரிப்பது நல்லதன்று" எனப் புகன்றேன். அம்மன்னவர் "மந்தாகினி! உன் விருப்பம் உன்னாலேயே நிவர்த்திக்கப்பட்டது. அதற்கு விரோதமாக நான் உன்னை அடையமாட்டேன். இதோ பார்! நீ என் வலத்துடையில் உட்கார்ந்து என்னை விரும்புகின்றனை; இது மகளும் மருமகளும் உட்கார தக்கவிடம். மனைவி எப்பொழுதும் இடத்துடையில் இருக்கவேண்டியவள். நன்றாய்த் தெரிந்தும் நீ அதனை மறந்துபோயினை. நான் உன்னை மருமகளாக விரும்புகிறேன். நீ என் மகனுக்குப்

பட்டமகிஷியாக வா! தெய்வசம்மதமும் இப்படியேயிருக்கிறது” என்று கூறினர். நான் சிரித்துக்கொண்டு “இராஜரிஷியே! தங்கள் இஷ்டம் நிறைவேறட்டும். நான், தங்கள் அன்பினால் தங்கள் புத்திரனை அடைகிறேன். பிரசித்திபெற்ற பரதகுலத்துக்கு மருமகளாவதில் எனக்கு வாஞ்சையுண்டு. ஆனால், தங்கள் புத்திரர் எனக்கு அநிஷ்டத்தைச் செய்யலாகாது. என் வரலாற்றையாவது அன்றி என் செயல்களையாவது அவர் தெரிய விரும்பலாகாது. இவ்வுடம்படிக்கையின்படி நான் அவருக்கு மனைவியாவேன்” என்று சொல்லி மறைந்தேன். தங்கள் பிதாவும் ‘அப்படியே நடக்கட்டும்’ எனப் புகன்று பட்டணம் போனர். அப்புறம் நெடுநாள் கழித்துத் தாங்கள் பிறந்தீர்கள். பிதாவின் யௌவனபருவம் சாந்தமடைந்த பிற்பாடு உண்டான காரணத்தினால் தங்களுக்குச் சந்தனு என்று பெயரிடப்பட்டது. இதுதான் நடந்த சரித்திரம்” என்று சொன்னாள்.

சந்தனு மன்னவன் “புகழ் பொருந்தியவளே! நீ உயிர்களின் உணவுக்கு இன்றியமையாதவள். மகா முனிவர்களால் முக்காலமும் துதிக்கப் பெற்றவள். அசுத்தங்களைக் களைபவள். உன்னைப் பிதாமகன் சபிக்கக் காரணம் என்ன? உன் குற்றம் யாது? குற்றமற்றவர்களை எவரும் சபிக்கமாட்டார்களன்றோ? அதனை எனக்கு விளங்கவுரை” என்று கேட்டான்.

கங்கை “அரசரே! முன்னர் இக்ஷ்வாகு குலத்தில் சத்தியம் தவறாதவரும், சண்டையில் தோல்வியுறாதவருமான மகாபிஷக் என்று ஒரு மன்னவர் இருந்தார். அவர் மனம் எப்பொழுதும் தருமத்தையே விரும்பும். அவ்வரசர் ஆயிரம் அசுவமேதங்களாலும், நூறு இராஜசூயங்களாலும் தேவர்களையும் தேவர்க்கரசனை இந்திரனையும்

களிக்கச் செய்தனர். அவர் இராஜ்யம் எல்லா நன்மைகளுக்கும் நிதியாக விளங்கிற்று. அவர் நெடுங்காலம் வரையில் நிலவுலகத்தில் நீதி செலுத்தினர். பிற்பாடு அம்மன்னவர் தெய்வ வடிவங்கொண்டு சுவர்க்கத்துக்குச் சென்றார். தெய்வ பதங்கள் யாவும் அவரால் அநுபவிக்கப்பட்டன. அவர் அப்படியே அவ்வுலகங்களில் அநேக வருஷகாலம் தடையின்றிச் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்.

சத்திய லோகத்தில் அப்பொழுது ஒரு மகா சபை கூடிற்று. அதற்கு மகாபிஷக் என்ற மன்னவரும் வந்திருந்தார். புண்ணிய புருஷர்களாலும், முனிபுங்கவர்களாலும் அந்தச் சபை நிறைந்து அழகாகப் பிரகாசித்தது.

"வான்முக மதியமும் புதிய மாலிகைக்
கான்முக விதழியும் கமழும் கங்கையாள்
தேன்முகம் பொழிதரு செய்ய தாமரை
நான்முகன் பேரவை நண்ணினள் அரோ"

வில்லிபுத்தூரார்.

"சக்ரவர்த்தியே! ஜீவர்களின் சீர்திருத்த சம்பந்தமான விஷயங்களில் நான் ஒன்றைக் கவனித்து வருகிறேன். அதனிமித்தம் ஒவ்வொரு சபையிலும் சென்று பேச எனக்கு இடமுண்டு. பேசவும் ஆலோசிக்கவும் விஷயங்களும் இருக்கும். ஆதலால், நான் என்னை நன்றாக அலங்கரித்துக்கொண்டு அவ்விடத்துக்குச் சென்றேன். அப்போது நான் உடுத்திருந்த வஸ்திரம் தற்செயலாகக் காற்றினால் விலகிப்போயிற்று, நான் நாணத்தினால் கலங்கி ஆடையைத் திருத்திக்கொண்டிருந்தேன். எல்லாத் தேவர்களும் எனக்கு நேர்ந்த அவ்வவமானத்துக்கு வருந்திக் 'கஷ்டம்! கஷ்டம்!!' என்று கண்களை மூடிக்கொண்டார்

கள். ஆனால் மகாபிஷக் என்ற மன்னவர் மாத்திரம் கொஞ்சமும் கூச்சமின்றி என் அங்கத்தைக் கூர்ந்து நோக்கினார்.

நான்முகக்கடவுள் அதனை அறிந்து 'அறிவற்றவனே! நீ தேவனாகமாறியும் மனிதர்களின் அற்பகுணம் மாத்திரம் உன்னைவிட்டு இன்னும் அகலவில்லை. இனித் தெய்வ பதங்கள் உனக்கு இடம் கொடுக்கமாட்டா. நீ மனித வுலகத்திற் பிறந்து நெடுங்காலம் இரு. உன்னால் விரும்பப்பட்ட இக்கங்காதேவி உனக்கு மனைவியாகி உனக்கு மிகவும் அப்பிரியமான காரியங்களைச் செய்து வரட்டும்' என்று சொன்னார். அந்த ராஜரிஷி சந்திரவம்ச சக்ரவர்த்தியான பிரதீப மகாராஜாவைத் தமக்குப் பிதாவாக விரும்பினார். நான் மனத்தை யடக்கும் திறமையற்ற அம்மன்னவரை நினைத்துக்கொண்டு இருப்பிடத்துக்குத் திரும்பினேன். அரசகேசரி! தாங்களே அம்மன்னவர். பிதாமகன் சாபத்தினால் இத்தனைநாள் தங்களைப் பதியாக அடைந்திருந்தேன். குழந்தைகளைக் கொன்று கொன்று தங்களுக்கு அப்பிரியத்தையும் செய்தேன். இனி எனக்கு விடைகொடுங்கள். நான் சென்று வருகிறேன்" என்றாள்.

## அதிகாரம் 8

### களவு

" கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம்செய்வர்—அம்மா!
முளைக்கும் எயிறு முதிர்சுவை நாவிற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று."
சிவப்பிரகாசர்.

சந்தனுமன்னவன் "சிறப்புள்ளவளே! வசுக்கள் சாபம் எப்படிப்பட்டது? அவர்கள் ஏன் உன் வயிற்

றில் வந்துபிறந்தனர். தேவர்கள் பூமியிற் பிறந்தால் உயர்ந்த வாயுளும் சிறந்த கீர்த்தியும் பொருந்தியிருப்பார்கள் என்று புகல்வார்கள். இவர்கள்மாத்திரம் பிறந்ததும் இறந்துபடுவானேன்? அதனை எனக்குச் சொல்" என்றான். கங்கை "பிரபுக்களில் தலைவரே! அவர்கள் சரித்திரம் கேட்கத்தக்கது. நான் ஒரு சமயத்தில் சொர்க்கலோகச் சார்பில் சென்றுகொண்டிருந்தேன். அங்கு உலகத்துக்கு உணவுப் பொருள்களை உண்டு பண்ணுகின்றவர்களான தரன், துருவன், சோமன், ஆபன் அநலன், அநிலன், பிரத்தியூஷன், பிரபாஸன் என்ற அஷ்டவசுக்களும் விசனத்துடன் வந்துகொண்டிருந்தார்கள். நான் அவர்களைக் கண்டு 'குற்றமற்றவர்களே! தெய்வத்தன்மை பொருந்திய உங்கள் உடலின் ஒளி குறைவானேன்? முகம் விசனத்தில் மறைவானேன்? எக்குற்றத்தின் பொருட்டு நீங்கள் இங்ஙனமானீர்கள்?' என்று கேட்டேன்.

அவர்கள் 'அன்னையே!

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது." திருவள்ளுவர்.

வினையின்பயனை வரவொட்டாமல் தடுத்துக்கொண்டவர் இல்லை. எங்கள் அற்பபுத்தியினால் நாங்கள் வசிஷ்டர் கோபத்துக்கிலாகினோம். அவர் எங்களை மனிதராகும்படி சபித்தார்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது." திருவள்ளுவர்.

தவத்தினால் விளங்கும் அம்முனிவர் சாபத்தை நாங்கள் எவ்விதம் தடுத்துக்கொள்ளமுடியும்?' என்றனர்.

நான் 'வசுக்களே! அவர் சாந்தசமுத்திரம்; உங்களைச் சபிப்பதற்கு நீங்கள் என்னசெய்தீர்கள்?' என்று வினவி

னேன். அவர்கள் "வருணபுத்திரரான வசிஷ்டர் ஆச்சிரமம் மேருவின் சரிவிலிருக்கிறது. அது புண்ணியமும் பவித்திரமும் பொருந்தியது. காய்களும் கனிகளும் குலுங்கும் மரங்கள் நெருங்கியது. பறவைகளும் விலங்குகளும் கூட்டம் கூட்டமாகக் குலாவுதலுடையது. விரதி, யோகி, ஞானி, மௌனி என்ற எல்லாத் தவவகுப்பினரும் அவ்விடத்தில் நிறைந்திருப்பார்கள். அங்கு வேதவொலி அறாமலும் வேள்விப்புகை மாறாமலும் விளங்கும். ஒன்றையொன்று பகைத்து வாழும் உயிர்கள் அவ்விடத்தில் இல்லை. தீங்கென்பது அங்குத் தீர்ப்பாய்க் கிடையாது. கொடுஞ்செயல் புரிவோரும் அவ்விடத்துக்கு வந்தால், நல்லவர்களாக விளங்குவர். தேவரும் மனிதரும் வசிஷ்டரைக் காணத் திரள்திரளாக வந்துகொண்டிருப்பார்கள். இந்திரவிமானங்களும், இரதங்களும், எழிற்புரவிகளும், இணையற்ற யானைகளும் அங்கு எப்பொழுதும் வரிசை வரிசையாக நிறைந்து விளங்கும். அப்படிப்பட்ட அவ்வுயர்ந்த ஆச்சிரமத்தில் அம்முனிவர் அருந்தவம் செய்து வருவார்.

ஒரு சமயத்தில் நாங்களும் எங்கள் மனைவிகளும் அவ்விடத்துக்குச் சென்றோம். நந்தினி என்னும் தெய்வப் பசுவும் அதன் கன்றும் அங்கு ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தன. அப்பசு காமதேநுவின் வகுப்பு. அதன் வால் மயிர்க்குஞ்சம் நிறைந்து நிலத்திற்படிந்து புரளும். கண்கள் அழகும் கறுப்பு மானவை. கொம்புகள் சிறியவும் திண்ணியவுமானவை. முகம் அழகுள்ளது. குளம்புகள் நீலமணிபோல நிகு நிகு வென்று பிரகாசிக்கும். கால்கள் கடைசற் பிடித்ததுபோலக் கவின்கொண்டு விளங்கும். காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவருகின்ற பளபளப்புள்ள மேனியும் புஷ்டியுள்ள உடலுமுடைய அந்தப் பசு

அங்கு அதிக மேன்மைகொண்டு விளங்கிற்று. காமதேனுவுக்கிருக்கும் எல்லாச் சக்தியும் அதற்குண்டு. அஃது எவ்வளவு பால்வேண்டினும் அந்நிமிஷத்திலேயே கொடுக்கும். ஆச்சிரமத்துக்கு அன்றாடம் வேண்டிய யாகப்பொருள்களினிமித்தம் அது வசிஷ்டமுனிவருக்கு இந்திரனால் கொடுக்கப்பட்டது.

அன்னையே! எங்களில் பிரபாஸன் மனைவி அத்தெய்வப்பசுவைப் பல தடவை தன் கணவனுக்குக் காட்டிப்புகழ்ந்தனள். அவளுக்கு அதனைத் தனதாக்கிக்கொள்ள விருப்பம் உண்டாயிற்று. அதனை யறிந்த பிரபாஸன் தன் மனைவியை நோக்கி "இப்பசு காமதேனுவைக் காட்டினும் சிறந்தது. இதன்பாலைப் பருகுகின்றவன் பதினாயிரம் வருஷம் வரையில் கிழப்பருவமடையான். இது வசிஷ்டருடையது. அவர் உத்தரவில்லாமல் இப்பசுவை எப்படிப்பட்டவர்களும் தொடமுடியாது. ஒருவன் தன் சக்தியினால் காமதேனுவையும் சுவாதீனப்படுத்திக் கொள்ளலாம். இந்தப் பசுவை இந்திரன் முதலானவர்களுக்குங்கூட அப்படி எண்ணவும் சக்தியில்லை. 'கிட்டாதாயின் வெட்டெனமற' பேராசைகொள்ளற்க. உன் எண்ணத்தை மறந்துவிடு" என்று சொன்னான்.

அவன் மனைவி 'தலைவரே! மண்ணுலகத்தில் ஜிதவதி என்று எனக்கொரு தோழி இருக்கிறாள். அவள் உசீநரன் என்ற உயர்ந்த அரசன் குமாரி. அழகிற் சிறந்தவள். அறிவில் மிகுந்தவள். நான் இத்தெய்வப்பசுவை அவளுக்குத் தர விரும்புகிறேன். இதன் பாலைப்பருகி அவள் நித்திய யௌவனத்தோடு நெடுங்காலம் இருந்துவரட்டும். அழகுக்கு முதிர்பருவம் பெரிய சத்துரு. பெண்கள் எவ்வளவு அழகிகளாயினும் மூப்புத் தொடர்ந்தமாத்திரத்தில், அருவருப்புக்குள்ளாவர். ஜிதவதி என் சிநேகத்தினால்

தன் அழகை நெடுங்காலம் வரையில் கெடாமல்வைத்து அநுபவித்து வரட்டும். என்னுடைய இவ்வாசையைத் தாங்கள் விலக்கலாகாது. இவ்விருப்பத்தினும் மேலான வேறு பிரியம் எனக்கில்லை. இப்பசுவைக் கன்றோடுகூட இப்போதே பிடித்துத்தாருங்கள். இத்தொழில் மனிதருக்கு அசாத்தியமல்லாமல் தேவச்சிரேஷ்டராகிய தங்களுக்கு அசாத்தியமன்று" என்று சொன்னாள்.

"ஈண்டுநீர் வையத்துள் எல்லாரும் எத்துணையும்
வேண்டார்மன் தீய விழைபயன்—நல்லவை
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுத லரிது." நாலடியார்.

பிரபாஸனுக்கு மனைவியின் எண்ணத்தை மாற்றமுடியவில்லை. தான் செய்யப்புகும தீச்செயலுக்கு எங்களையும் உடன் வரும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். உடனுறையும் ஒற்றுமையால் எங்களுக்கு மறுக்கமுடியவில்லை. அப்புறம் நாங்கள் எழுவரும் வினையின் வசப்பட்டு அவன் அபிப்பிராயத்துக்கு இணங்கினோம்.

பின்னர் ஒருநாள் இரவு ஆச்சிரமத்தில் எல்லாரும் அயர்ந்த நித்திரையிலிருக்கையில் நாங்கள் அத்தெய்வப் பசுவைக் கன்றுடன் பிடித்துச் சென்றுவிட்டோம். அஃது எங்களுடன்வர இடக்குப்பண்ணவில்லை. மற்றைநாள் அதிகாலையில் ஆச்சிரமத்து முனிவர்கள் அக்னிஹோத்திர சாலையை அடைந்தார்கள். அங்கு வழக்கம்போல ஓமப் பொருள்கள் காணப்படவில்லை. பசுவைத் தேடினார்கள் போலும்; அஃது அகப்படவில்லை. அவர்கள் கலவரமடைந்து அதனை அருந்ததிநாயகனுக்கு அறிவித்தார்கள். அவர் தமது ஞானக்கண்ணினால் நந்தினியின் நிலைமையை நன்றாக அறிந்து கொண்டனர். அவருக்குக் கோபம் அதிகரித்தது. உடனே அவர் "என் அழகான கறவைப் பசு

வைக் கவர்ந்துகொண்டுபோன 'வசுக்கள் எண்மரும் மண்ணுலகத்தில் மனிதர்களாகப் பிறக்கட்டும்" என்று சபித்தார்.

"விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீர்ஒழுகு சான்றோர் சினம்" ஔவையார்.

என்பது முதுமொழியன்றோ ?

"தூய்மையுள்ளவரே! அஃது எங்களுக்குத் தெரிந்தது. பின்னர் நாங்கள் நிமிஷமும் தாமதிக்கவில்லை. வசிஷ்டரிடத்துக்குச் சென்று 'அநுக்கிரகிக்கவேண்டும்' என்று வணங்கினோம். அவர் "வசுக்களே! நீங்கள் தேவரில் தலைமை பெற்றவர்கள். உங்கள் ஒழுக்கம் உயர்ந்திருக்க வேண்டும். களவுசெய்வது கொடிய குற்றம். அஃது ஐம்பெரும் பாவங்களில் ஒன்று. நீங்கள் பசுவைத் திருடியிருக்கிறீர்கள். அதற்குத் தண்டனை தவறலாகாது. நீங்கள் இப்பொழுதே மனிதராகவேண்டியதுதான்" என்றார். நாங்கள் "கருணைக்கடலே! எங்கள் எண்மருக்கும் ஒரே விதமான சாபத்தை உறுதிப்படுத்தலாகாது; நாங்களில் சம்பந்தப்படினும் பலனில் பாகம் பெறவில்லை; பெறுவதாகவும் உத்தேசமில்லை; த்யோ என்னும் மறுபெயருடைய இப்பிரபாஸன் தன் மனைவியை மகிழ்விப்பதன் பொருட்டு எங்களைத் துணை விரும்பினான்; நாங்கள் சிநேகத்தினால் சம்மதித்தோம்; இஃதுண்மை; கிருபை செய்யவேண்டும்" என்று வேண்டினோம்.

அத்தெய்வ முனிவர் சிறிது சாந்தமடைந்தனர். ஞானத்தினால் உண்மையை யுணர்ந்தனர். பின்னர் அவர் வசுக்களே! சாபம் பொய்க்காது; எண்மரும் மனிதராக வேண்டியதுதான்; பிரபாஸன் ஒழிந்த மற்றைய எழுவரும் பிறந்ததும் இறந்து பதத்தை அடையுங்கள்; அவன்

மாத்திரம் மனிதவுலகத்தில் மிக நீண்டகாலம் இருந்து வரட்டும்; மனைவியின் மகிழ்ச்சியை விரும்பிக் களவு செய்தபடியினால், அவன் உலகத்தில் மனைவியில்லாமலேயே முற்றிலும் இருக்கக்கடவன்; ஆனால், உலகத்துக்கும் பிதாவுக்கும் நன்மை செய்வதில் ஊக்கமுள்ளவனாகட்டும்'' என்று சாபவிடை கூறினார். இப்பொழுதுதான் அவரிடம் விடைபெற்று வந்துகொண்டிருக்கிறோம். சாபமடைந்தவர்களுக்குச் சந்தோஷமிராதல்லவா? இதுதான் எங்கள் வரலாறு'' என்று சொன்னார்கள்.

"பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்." சிவப்பிரகாசர்.

பாரதரே! எனக்கு அவர்கள்மேல் இரக்கமுண்டாயிற்று. நான் "வசுக்களே! சந்திரவம்ச சக்ரவர்த்தியான சந்தனு மன்னவருக்கு நான் மனைவியாகப் போகிறேன்; நீங்கள் ஒவ்வொருவராக என் வயிற்றில்வந்து பிறவுங்கள்; உங்கள் இஷ்டத்தை நிறைவேற்றுகிறேன்; ஆனால், அம்மன்னவருக்கு ஒரு புத்திரனை நிலை நிறுத்தவேண்டும்; அவருக்கு என் சேர்க்கை விலகலாகாது'' என்றேன். அவர்கள் 'அன்னையே! எங்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சியை அளித்தீர்கள். பிரபாஸன் சக்தியோடு எங்கள் சக்தியிலும் எட்டில் ஒருபாகத்தைத் தருகிறோம். அவற்றில் தமக்கும் சக்ரவர்த்திக்கும் சந்தோஷமான தநயன் பிறப்பான்' என்று சொல்லி வணங்கிப்போனார்கள். கௌரவரே! வசிஷ்டர் சாபத்தினால் பிறந்த இந்தப் புத்திரன் உலகத்தில் நெடுங்காலம் வரையில் இருந்து தருமங்களைச் செய்வான்; எனக்கு விடை கொடுங்கள்'' என்று சொன்னாள்.

## அதிகாரம் 9

### விருப்பமும் மறுப்பும்

"கயத்திடை உய்த்திடினும் கல்நனையா தென்றும்
பயற்றுக் கறிவேவா தற்றால்—இயற்றி
அறவுரை கேட்ட விடத்தும் அனையார்
புறவுரை தேறா தவர்."

மூன்றுறை யரையனார்.

மனிதன் அகக்கரணங்கள் அற்பச்சடப் பொருள்களினால் ஆனவை. பேராசை பொறாமை முதலியவை அவற்றின் பெரும்பான்மையான இயற்கைக்குணம். சூரியனிலிருந்து ஒளியையும் தண்ணீரிலிருந்து தட்பத்தையும் பிரிக்க முடியாததுபோல அக்குணங்களையும் அவற்றிலிருந்து பிரிக்க முடியாது. மனிதனுக்கு அநுபவிக்குந்தோறும் அநுபவிக்குந்தோறும் ஆசை வளர்ந்துகொண்டிருக்குமேயன்றி அடங்கிவிடமாட்டாது. நேற்று உயர்ந்த உணவை வயிறார உண்டவன் மறுபடியும் அவ்வுணவையே நாடிச் செல்கிறான். ஒருவன் அவனைக்கண்டு 'நண்பனே! நேற்றுப் போதும் போதும்; வேண்டா வேண்டா என்று விளம்பினை. இன்று மறுபடியும் அதனையே விரும்பிச் செல்கின்றனை. இஃதென்ன வொழுங்கு?' என்று கேட்டால், அவன் 'ஐயா! நான் நேற்று அப்படி வெறுக்கவில்லை. வயிற்றில் இடமில்லாமையினால் அப்பொழுது போதும் என்று சொன்னேன். உண்ட உணவு ஜீர்ணித்து உடம்பிற் கலந்துவிட்டது. வயிற்றிலும் கொஞ்சம் இடமுண்டாயிற்று. இப்பொழுது மறுபடியும் அவ்வுணவை விரும்புகிறேன்' என்பான். இதுதான் எல்லாவற்றுக்கும் விடை.

"ஒருநா ளுணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேல்என்றால் ஏலாய்—ஒருநாளும்
என்நோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது."

ஔவையார்.

தெவிட்டாத புலன்களும் தெவிட்டாத ஞானபலமும் மனிதருக்குக் கிடைக்கவில்லை. அதனிலும் அகக்கரணங்கள் மிகவும் அற்பமாதலால் ஒருவன் ஆவல் அடங்கும் வரையில் இருந்து அநுபவிப்பதற்கும் இல்லை. அவை அடிக்கடி சோர்தலை யடைகின்றன. சோர்வு சற்று நீங்கின மாத்திரத்தில் முன்னர் விட்டவற்றை விரும்பி நிற்கின்றன. இவ்வுண்மை யறியாதவர் வெறுத்தவற்றையே மீளவும் விரும்புவது மனிதவியற்கை யென்று வாய்கூசாமல் விளம்புவர். மனிதன் எவற்றையும் உண்மையில் வெறுப்பதில்லை. இன்னமும் வேண்டும்; இன்னமும் வேண்டுமென்றே எண்ணி வருந்துகிறான். அநுபவிப்பதற்குரிய காரணங்கள் அடியோடு அழிந்து போனாலன்றி அவ்வாசை அடங்கமாட்டாது.

சந்தனுமன்னவன் "பிரியமானவளே! உன் வசனம் எனக்கு அளவில்லாத சந்தோஷத்தை அளித்தது. தெய்வ ரகசியங்கள் பலவற்றையும் என்மீதுள்ள அன்பினால் நீ எனக்குத் தெரியப்படுத்தினை. கர்ப்பவாசம் செய்ததனால் அவற்றில் ஒன்றாவது எனக்கு நினைவிலிருக்கவில்லை. எப்படி யிருந்தாலும் மூன்றுலகத்திலும் தடையின்றிச் சஞ்சரிப்பவளும், தன்னிற்படிந்தவர் பாவங்களைப் பற்றறத்தொலைப்பவளும்,சிவபெருமான் சிரத்தில் தங்கியிருப்பவளுமான நீ எனக்கு மனைவியானதைக்காட்டிலும் வேறு சிறந்ததொன்றில்லை. எழிலாரணங்கே! என் வார்த்தையைக் கேள். "செய்வன திருந்தச்செய்" இச்சந்திரவம்ச வளர்ச்சி உன்னையும் என்னையும் எதிர்பார்த்திருக்கின்றது. உலகத்தில் இந்தக் குலம் உத்தமமானது. நகுஷன், யயாதி, துஷ்யந்தன், பரதன் முதலிய புண்ணிய புருஷர்கள் இக்குலத்தில்தான் அவதரித்தார்கள். இப்படிப்பட்ட உயர்ந்த குலத்தை வீணாக்கலாகாது. குலம் விளங்காவிட்

டால் உண்மையுணராதவர் வசைபேசுவார்கள். நீ இந்தக் குலத்தின் மருமகள். இந்தச் சிறுவன் நெடுங்காலமிருந்தாலும் இவனால் சந்ததி விளங்கமாட்டாதல்லவா? இருவரும் இன்னும் சிலகாலம் வரையில் இவ்வரண்மனையிலிருந்து இல்லறம் நடத்தலாம். நான் தெய்வபதத்தை இதனினும் உயர்ந்ததென்று நினைக்கவில்லை.

" போயிருந் தென்பயன் போகம் பல்வகை
யாயிருந்தன; எலாம் அருந்தி யின்னமும்
மாயிருந் தரணியில் மன்னு சில்பகல்
நீயிருந் தரசியல் நிறுத்தி மீளுவாய்." வில்லிபுத்தூரர்.

இக்குலத்துக்கு இன்னொரு புத்திரனை உண்டாக்கித் தருவது உயர்ந்த தருமம். அஃது இம்மை மறுமை இரண்டிடத்திலும் இன்பத்தை உண்டு பண்ணும்" என்று சொன்னான்.

" பொல்லாத புலையுடலைப், புழுப்பொதிந்த போர்வைதனை,
நில்லாத நீரெழுத்தை, நிகரிலிதன் திருவாக்கைக்,
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருள் எனவே ஒருகணமும் நாடாரே."
சிவதருமோத்தரம்.

கங்கை " மனிதவிருப்பம் நிலையற்றது. அற்பபுத்தியுள்ள மனிதரல்லாமல் அமிருதத்தை யருந்தும் தேவர்கள் அதனை அருவருப்பார்கள். மித்திரனுக்கும் மின்மினிக்குமுள்ள வித்தியாசம் அவ்விரண்டுக்கும் எப்பொழுது மிருக்கும். சில் வாழ்நாள், பல்பிணி, சிற்றறிவு இவற்றையுடைய மனிதரால் அநுபவிக்கப்படும் அற்பசுகம் அரைக்கணத்தில் அழிந்தொழியும். மனிதசரீரத்தில் உயர்வையும், தெய்வசரீரத்தில் இழிவையும் என்றும் காணமுடியாது. தெய்வவின்பம் தூய்மையுள்ளது. அதனை யறிந்தவர் வேறின்பத்தை விரும்பார். உங்

களுக்கு இன்பம் தெவிட்டவில்லை. இன்னும் சிலகாலம் வரையில் இருந்துவாருங்கள். இனி நான் அரைக்கணமும் இருக்கமாட்டேன். இருவரும் கலந்திருக்க வேண்டிய காலம் கடந்துபோயிற்று. எனக்கு உத்தரவு தாருங்கள். மனைவியின் உரிமையைக்கொண்டு இனித் தங்களுடன் பேசலாகாது. பேசின் பாவம் வரும். தங்களுக்குக் கர்ப்ப வாசத்தினால் தெய்வசுகம் மறந்துபோயிற்று. நான் பிற வாதப்படியினால் அதனை மறக்கவில்லை. மனித இன்பம் எனக்குத் தெவிட்டுகின்றது. தாங்கள் இருந்து சந்ததியை விளங்கச் செய்யுங்கள்.

"மகாராஜாவே! நான் இக்குழந்தையை எடுத்துச் செல்கிறேன். இவன் என்பார்வையில் இருந்து வரட்டும். இவன் தாயற்றவனாகாதிருக்கட்டும். நல்லசமயத்தில் தங்களிடம் வந்து சேருவான். தாங்கள் வருந்தற்க. வேறு மணஞ்செய்துகொண்டு வாழ்க்கையை விநோத மாக்குங்கள். பின்வரும் நன்மை தீமைகளைப் பொறுத்திருந்து அநுபவிக்கும் பேரறிவு மனிதவர்க்கத்துக்கில்லை. ஆதலால், என்னாற் சொல்லப்பட்ட அனைத்தும் நான் சென்றதும் மறந்துபோய்விடும். இல்லாவிட்டால், இவை யனைத்தும் தங்கள் மனத்தில் எப்பொழுதும் இருந்து வாதைப் படுத்திக்கொண்டிருக்குமல்லவா? இந்தப் புத்திரன் உலகத்துக்கும் தங்களுக்கும் உயர்ந்த நன்மைகளை உண்டு பண்ணுவான். நான் சென்று வருகிறேன்" என்று சொல்லிக் குழந்தையுடன் மறைந்துபோனாள்.



# அதிகாரம் 10

## மகன்

" மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா ஒலிகடல்போல்—மிக்க
இனநலன் நன்குடைய ராயினு மென்றும்
மனநல மாகாவாம் கீழ்." மூன்றுறை யரையனார்.

சிறந்த ஞானமுள்ளவனும், தேவர்களாலும் முனிவர்களாலும் துதிக்கப் பெற்றவனும், உண்மை யுரைப்பவனும், தருமத்தில் நடப்பவனுமான சந்தனுமன்னவன் கங்கையின் பிரிவுக்கு வருந்தி, ஊண் உறக்கங்களைத் துறந்து, உயிரில்லாத வுடம்புபோலவும், உன்மத்தங்கொண்ட மனிதன்போலவும் ஒருவரையும் நிமிர்ந்து நோக்காமல், உலக பரிபாலனத்தையும் உள்ளத்திற் கொள்ளாமல் வருந்தத் தொடங்கினான். மந்திரி முதலானவர் அரசன் எண்ணத்தை வேறுதுறைகளில் திருப்பப் பலவிதத்திலும் பிரயத்தனித்தார்கள். அஃது ஒன்றிலும் மாறவில்லை. அம் மன்னவன் சாதாரணமான எளியமனிதனைப்போலப் பாகீரதி உலாவிவந்த இடந்தோறுஞ்சென்று கண்ணீர் விட்டுக் கலங்கினான். கங்கை தன்னுடன் இருந்தபோது நடந்து கொண்டவைகளையெல்லாம் தன் படுக்கை யறையில் சித்திரங்களாகத் தீட்டினான். தனிமையில் புலம்பினான். இவ் விதம் அவனுடைய காலம் வருத்தத்திலும் புலம்பலிலுமாகக் கழியத்தொடங்கிற்று. இராஜ்யபரிபாலன விஷயத்தில் அரசன் கவனிக்காத குறையை மந்திரிகள் வெளிக்குக்காட்டாமல் ஒழுங்காக நடத்திவந்தார்கள். சகோரம்போன்ற கண்ணும், சிவந்த வாயும், சிங்க நடையும், சந்திர வதனமுமுள்ள சந்தனுவுக்கு மனைவியின் பிரிவினால் உடம்பு வெளுத்து இளைத்து எலும்புகள் யாவும் இத்

தனையென்று எண்ணிக்கொள்ளும்படி யாயின. அவன் தன் சரீர சுகத்தைச் சற்றும் கவனிக்கவில்லை.

இங்ஙனம் அந்தச் சக்ரவர்த்தி சற்று முன்பின்னாக இருபத்தைந்து வருஷங்களைக் கழித்தான். பிற்பாடு மந்திரிகளின் கட்டாயத்தின்மீது அவன் ஒருசமயம் வேட்டையை விரும்பிக் கங்கைக் கரைக்குப் போனான். அவனுக்குப் பழைய ஞாபகங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மனத்தில் வந்து வருத்தி வாதனை செய்தன. அம்மன்னவன் அப்படியே கங்கைக்கரையில் நடந்து சென்றான். அப்போது ஆற்றில் தண்ணீர் குறைந்திருந்தது. அவன் அதன் காரணத்தை அறியச் செல்கையில் ஆங்கொரு சிறுவன் தன் வில்லை வளைத்துக் கூரிய அம்புகளைத் தொடுத்துக் கங்கையின் வெள்ளத்தைத் தடுத்து நிற்கக் கண்டான். கடலின் வயிற்றையும் கிழித்துக் கனவேகமாகச் செல்லும் அவ்வாற்று நீர் அச்சிறுவன் அம்புகளால் தடுக்கப்பட்டு அவ்விடத்திலேயே தேங்கி நின்றது.

அவ்வாலிபன் அழகின் அவதாரமானவன். அவனுக்கு இளம்பருவம் கழிந்து யௌவனபருவம் ஆரம்பித்திருந்தது. அவன் கண்கள் அன்றலர்ந்த தாமரையைக் காட்டினும் அழகாக விளங்கின. மார்பு அகன்று பரந்து ஆரங்களோடு பொலிந்தது. தோள்கள் இருப்புத் தூண்களினும் திண்ணியவாகிப் பருத்திருந்தன. ஆச்சா மரம் போன்ற அவன் கைகள் முழந்தாளளவும் தொங்கின. அவன் மன்மதனைப்போல அழகினால் மாத்திரம் உயர்வடைந்திருக்கவில்லை. குமாரக்கடவுள்போலப் பராக்ரமத்திலும் அவயவ இலக்கணத்திலும் மிஞ்சிவிளங்கினான். அவ்வாலிபன் தோற்றம் அரசன் மனத்தைக் கவர்ந்தது.

அரசன் ஆநந்த பரவசனாகி "ஆ! இந்தச் சிறுவன் எந்த வகுப்பைச் சேர்ந்தவன்? சக்ரவர்த்தியின் இலக்

கண்ங்கள் இவனிடம் சம்பூர்ணமாக விளங்குகின்றன். இவன் யார் பெற்ற செல்வன்? எத்தேசத்துக்கு அலங்காரமானவன். இவன் ஆற்றல் அளவு கடந்தது. இவன் தன் வில்லை வளைத்து நின்றால், இந்திராணியினும் அன்றி இந்திரைக் கேள்வனாயினும் எதிர்த்து நிற்க முடியாது" என்று மனத்துக்குள் பலவாறு வியந்து புகழ்ந்தான்.

இளைஞன் சந்தனு மன்னவனைத் தந்தையென்று எப்படி யறியமுடியும்? தன்னை விடாமல் நோக்குவதனால் அவன் ஆற்றலை அறியலாமென்று விளையாட்டுத் தனத்தினால் அவன்மேல் ஒரு மோகனக் கணையை விடுத்து மறைந்தான். அரசன் அவ்விசித்திரக் கணையினால் மதிமயக்கம் கொண்டு படியில் விழுந்து விட்டான். அவன் நிலைமை கங்கைக்குத் தெரிந்தது. உடனே அவள் அழகில் மிகுந்த அவ்வாலிபனை அழைத்துக்கொண்டு அரசன் முன்புவந்து அவன் அலங்கோலத்துக்கு வருந்தி அவனை யெடுத்துக் களை தெளியப் பண்ணினாள்.

பின்னர் அவன் நன்றாகத் தெளிந்த பிற்பாடு பாகீரதி "பாரதசக்ரவர்த்தியே! எல்லாம் தெரிந்த தாங்கள் என்னை நினைந்து இப்படி இளைக்கலாகுமா? இஃது அழகன்று; இனித் துயரொழியுங்கள். நிலையற்றவற்றுக்கு நிலைகலங்கலாகாது. உடல் நிலையற்றதாகும்போது அதனால் வரும் இன்பம்மாத்திரம் எப்படி நிலையுள்ளதாகும்.

"என்பினை நரம்பிற் பின்னி உதிரம்தோய்த்து இறைச்சி மெத்திப்
புன்புறம் தோலின் மூடி அழுக்கொடு புழுக்கள் சோரும்
ஒன்பது வாயிற் றூய வூன்பயில் குரம்பை தன்மேல்
அன்பறா மாந்தர் கண்டாய் அறிவினிற் சிறிய நீரார்."

மேருமந்தர புராணம்.

"கீர்த்தியுள்ளவரே! இவன் தங்கள் புத்திரன். என் வயிற்றிற் பிறந்தவன். என்னால் வளர்க்கப்பட்டவன்.

அஸ்திரவித்தையில் தேர்ந்தவன். கல்வியறிவில் சிறந்தவன். இவனை ஏற்றுக்கொள்ளுங்கள். இவ்விளைஞன் வசிஷ்டரிடத்தில் வேதங்களையும் அங்கங்களையும் ஓதினான். சுக்கிரரிடத்தில் மந்திரங்களைக் கற்றான். பிருகஸ்பதியினிடத்தில் சாஸ்திரங்களைப் படித்தான். பரசுராமரிடத்தில் வில்வித்தையைப் பயின்றான். எல்லாத் தெய்வப் படைகளும் இவனிடம் நிலைபெற்றுள்ளன. சமரில் யாவராயினும் இவனை வெல்லமுடியாது. தருமம் தெரிந்தவனும், சதுரனும், சூரனுமான இவனை ஆதியில் நான் சொன்னபடி தங்களுக்குக் கொடுக்கிறேன். இவன் தங்களிடமிருந்தால் இவ்வளவு கல்வியை அடைந்திருக்கமாட்டான். தங்களால் ஆங்கிரசர் பார்க்கவர் முதலானவர்களிடத்தில் சிறுவனை ஒப்புவிக்க முடியாதென்பதைத் தெரிந்துகொண்டுதான் நான் இவனை எடுத்துவந்தேன். தாயின் வளர்ப்பையும் தந்தையின் கல்வியையும் நானே இவனுக்குச் செய்திருத்தலால் இவன் காங்கேயன் என்ற பெயருடன் பிரசித்தியடைவான். இவன் தேவகாரியங்களைச் செய்யப் பிறந்தவன். அதனால் தேவவிரதனென்றும் சொல்வார்கள். இவன் தங்களுக்குப் பிரியமான காரியங்களைச் செய்வான். என் சேர்க்கை வீணாகாதிருப்பதற்கு இவனை அழைத்துச் செல்லுங்கள்'' என்று சொன்னாள்.

பின்னர் அப்புனிதவதி சிறுவனை நோக்கி "அன்புள்ள குமாரனே! இவர் உன் தந்தை. அத்தினபுரத்துக்கு அரசர். உலகத்துக்குச் சக்ரவர்த்தி. பாரதராஜ்யம் உன்னை எதிர்பார்த்திருக்கின்றது. நீ இவருடன் அத்தினபுரத்துக்குப் போ. இளவரசாக இருந்து இவருக்கு இதஞ்செய்து வா. உன்னை வளர்த்துக் கல்விகற்பித்த நற்றாயாகிய என்னை மறந்துவிடாதே நீ நினைக்கும்பொழுது நான் உன்னிடம் வந்து சேருகிறேன். அவசியம் நேரு

கையில் என்னை நினை. உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்" என்று சொல்லித் தேவவிரதனைத் தழுவி முத்தமிட்டுச் சக்ரவர்த்தியிடம் ஒப்புவித்து மறைந்தாள்.

சந்தனுமன்னவன் கங்கையின் வாய்மொழியிறுற் களித்துப், பாலசூரியன்போல விளங்கும் தன் புத்திரனை அணைத்து, இந்திரபதத்தைச் சொந்தமாகப் பெற்றவன் போல் அவனைத் தேரிலேற்றிக்கொண்டு பட்டணம் வந்து சேர்ந்தான். அமைச்சர் முதலானவர் சிறுவனது கல்விச் சிறப்பையும் வனப்பையும் கண்டு சந்தோஷம் கொண்டார்கள். சிலநாட்களுக்குப் பின்பு அம்மன்னவன் எல்லா அரசர்களையும் வரச்செய்து நன்முகூர்த்தமொன்றில் தேவவிரதனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தான். தேவவிரதன் பகைஞர்களை அடக்கி நீதிசெலுத்துவதில் ஒப்புயர்வற்றவனுகி எல்லாவிடங்களிலும் தன் பெரும்புகழ் பரவ உலகத்தைப் பரிபாலித்துவந்தான். சந்தனுமன்னவன் இராஜ்யசம்பந்தமான எல்லாவுரிமைகளையும் புத்திரனிடத்தில் ஒப்புவித்து அவன் ஆளுகையைக் கண்டு சந்தோஷம் கொண்டிருந்தான்.

தேவவிரதன் ஆட்சியில் தருமம் இன்னும் தழைத்தது. வளமை மிகுதியாய்க் கொழித்தது. அனைவரும் விசாரமற்று விளங்கினர். இங்ஙனம் நான்கு வருஷகாலம் கடந்தது.

## அதிகாரம் 11

### புதுவிருப்பம்

" கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி " நான்மணிக்கடிகை.

மற்றொரு சமயத்தில் விசாரமற்றவனான சந்தனு மன்னவன், யமுனை யாற்றங்கரையில் உலாவிக்கொண்டிருந்தான். அங்கு அவனால் அதற்குமுன் ஒருபொழுதும் நுகர்ந்தறியாத சிறந்த வாசனையொன்று சுகந்தமாக வீசிற்று. அதனை மலர்மணம் என்றாவது அல்லது வேறு மணம் என்றாவது தீர்மானிக்க முடியவில்லை. அதனைத் தெளிவதற்கு அவன் வழிபிடித்துச் சென்றான். சிலதூரம் சென்றதும் தெய்வப் பெண்போன்ற ஒரு கட்டழகி அவ்வாற்றங்கரையில் மிகவும் குளிர்ச்சியான ஒரு மாத்தடியில் நின்றுகொண்டிருந்தனள். அவள் உடம்பிலிருந்து புறப்படும் காற்றுத்தான் அவ்விதமான சுகந்தத்தை உண்டுபண்ணிற்றென்று அரசனுக்குத் தெரியவந்தது. அவள் மங்கைப்பருவம் நிரம்பினவள். நிறத்திலைல்லாமல் வேறு எவ்விதத்திலும் அவள் கங்கைக்குக் குறைந்தவளல்லள். கங்கை பரிசுத்தமான வெண்மை நிறம். அவள் அன்று பூத்த தாமரைநிறம். கங்கை கருப்பத்தில் பிறவாதவள். அவள் பிறந்தவள். கங்கை சற்று நீண்ட மெல்லிய உடலுடையவள். அவள் பலத்தினால் இறுகின உடலுடையவள். இருவருக்கும் இவற்றையல்லாமல் வேறு விதத்தில் வித்தியாசம் வகுக்கமுடியாது.

அப்பெண் தன் தளிர்க்கரத்தில் தந்தவேலை நிறைந்த ஒரு துடுப்புக்கோலைத் தாங்கியிருந்தனள். அணிகளையும் உடைகளையும் கொண்டு நிச்சயிப்பதானால் அவள் நடுத்தரமான குடும்பத்தில் பிறந்திருக்கவேண்டும். அவள் தொழிலும் அவ்வளவாக உயர்ந்திருக்கவில்லை. அவளைப் பெரும்பாலும் யமுனையாற்றில் ஓடம் விடுகின்றவளென்று நிச்சயிக்கலாம். அரண்மனைகளிலும் அகப்படமுடியாத பரிமளகந்தமானது அற்பத் தொழிலையுடைய அவள் உடம்பிலிருந்தி ஓய்வின்றி வீசுவது விந்தையினும் விந்தை. காதள

வும் நீண்டு செவ்வரிபடர்ந்த அவளது கரிய, அரிய, பெரிய, நெடிய, கூரிய கண்வனப்பில் சந்தனுமன்னவன் அமிழ்ந்துபோயினன்.

அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. எதிரிலிருப்பவளைப் பெண்ணென்றும், தெய்வமென்றும் நிச்சயிக்க முடியவில்லை. கடைசியில் அவன் தடுமாற்றத்தோடு அவள் சமீபம்சென்று "பொற்கொடியே! நீயார்? உன் பெயர் என்ன? மனிதர்களைக் காணமுடியாத இக்கொடுவனத்தில் நீ என்ன செய்கின்றனை?" என்று கேட்டான். அக்கன்னிகை "மகாராஜாவே! நான் வலைஞர் தலைவரான தாசமன்னவர் புத்திரி. அவர் இதற்கு அணிமையிலுள்ள பட்டணத்தில் இருந்துவருகின்றனர். என்னைப் பரிமளகந்தி என்று சொல்வார்கள். பிதாவின் கட்டளையினால் இங்குப் புண்ணியத்திற்கு ஓடம்விடுகிறேன். தங்களுக்கு க்ஷேமம் உண்டாகட்டும்" என்று சொன்னாள். மன்னவன் நல்ல அழகும், சொல்லினிமையும், திவ்விய மணமும் பொருந்திய அந்தப் பெண்ணை விரும்பி அவள் தந்தையைக் காண எண்ணினன். அவன் தன் உயர் குலத்தையும் அவள் இழிகுலத்தையும் சற்றும் கவனிக்கவில்லை. தருமபுத்தி யுள்ளவனாதலால் கவனியாமலும் இருக்கவில்லை. அவன் எண்ணம் இது; "செம்படவப் பெண்களுக்கு மீன்நாற்றம் இயற்கை. தெய்வ சம்பந்தமுள்ளவர்களுக்கும் இருந்திருக்கமுடியாத வாசனை இவள் உடம்பிலிருந்து கிளம்பிவருகின்றது. இவள் வசனம் உண்மை. அதிற் சிறிதும் பொய் கலப்பில்லை. இவள் குலத்துக்கும் தொழிலுக்கும் உடலமைப்பு ஒத்திருக்கவில்லை. ஒருசமயம் இவளுக்கே அதன் உண்மை தெரியாமலு மிருக்கலாம். நாம் சந்திரகுலத்துக்கும் செம்படவர் குலத்துக்கும் சம்பந்தம் உண்டுபண்ணப் பார்க்கிறோம். நம் எண்ணத்

தைப் பிறர் அறிந்தாலும் நகைப்புக் கிடமாகும். ஆனால் நம்மனம் இதுவரையில் தீவழியிற் சென்றதில்லை. அது தூய்மையுள்ளது. அது தகாதவிடத்தில் மறந்தும் செல்ல மாட்டாது. இஃது நீண்டகால அநுபவம். அம்மனம் இவளை விரும்பி நிற்கின்றது. அதனைக்கொண்டு பார்த்தால் இவள் நமக்குத் தகுந்தவளாகவே இருக்கவேண்டும். எல்லாவற்றிற்கும் இவள் தந்தையை விசாரிக்கலாம்" இங்ஙனம் அம்மன்னவன் ஆலோசித்துக்கொண்டு தாச மன்னவனிடம் சென்றான்.

பரிமளகந்தியின் தந்தைக்குச் சக்ரவர்த்தியின் வருகை தெரிவிக்கப்பட்டது. அவன் அமைச்சர்களுடன் வந்து முத்து முதலிய நெய்தற் பொருள்களைக் காணிக்கை வைத்து வணங்கினான். அரசன் இரதத்திலிருந்தவண்ணமே அம்மன்னவனைக் குசலம் வினவிப் பாகனை நோக்கினான். பேசுவதிற் சதுரனாகிய அச்சாதி யஜமானன் கருத்தைத் தெரிந்துகொண்டு "ஐயா தாசர் தலைவரே! தங்கள் அதிருஷ்டம் சொல்லத்தாமன்று. இன்றுமுதல் தங்களுக்கு நற்காலம் பிறந்துவிட்டது. ஏனென்றால், சந்திர வம்ச சக்ரவர்த்தியான இப்பாரதர் தங்கள் புத்திரி பரிமளகந்தியை விரும்பி வந்திருக்கின்றனர். இதன் பெருமையை என்னென்று சொல்வது? இது தங்கள் தவமோ! குலத்தார் தவமோ! அல்லது புத்திரியின் பாக்கியமோ! மதிகுலமன்னவர் மருமகராகும் மகிமை மதிக்கத்தக்கதன்று. தாங்கள் இதுமுதல் முக்குலத் தாசர்களுக்கும் முதன்மை பெற்றுவிட்டீர்கள்" என்று கூறினான்.

தாசமன்னவன் சக்ரவர்த்தியைப் பணிந்து "அண்ணலே!

" பூருவின் மரபில் பிறந்தகோ மகன்என் புன்குல மகள்
[மணம் பொருந்தல்
மேருவும் அணுவும் நிறுக்குமா றொக்கும் மேல்இனி
[யிவைப்புகன் றென்கொல்
பாருவ கையினுல் ஆளுதற் கிருந்தான் பகீரதி மகன்
[இவள் பயந்த
சீருடை மகன்மற் றென்செய்வான் இசையின்
[செய்கைதான் திருவுளங் குறித்தே."
வில்லிபுத்தூரர்.

தாங்கள் பரிசுத்தமான பூருவம்சம். அரசச்செல்வம், அதிகாரம், அந்தஸ்து என்ற மூன்றும் தங்களுக்கு அழகு செய்கின்றன. எத்தனை பிறப்புக்கள் தவம்செய்தாலும் என்போன்ற இழிகுலத்தவருக்குத் தங்கள் சம்பந்தம் கிடைக்கமாட்டாது. நான் அதனை அறியாதிருக்கவில்லை. என்பெண் மணப்பருவத்தை அடைந்திருக்கின்றனள். தெரிந்தவர் பருவம்வந்த பெண்களை வீட்டில் வைத்திருக்க மாட்டார்கள். அவள் மணவிஷயமான கவலை எனக்கு இல்லாது போகவில்லை. என்மகளைத் தாங்கள் விரும்புவ தாயின் ஒருவரம் கொடுக்கவேண்டும். அது நெடுநாட்க ளாக என்நெஞ்சத்தில் இருந்து வருகின்றது. எந்தக் கார ணத்தாலும் நான் அதனை மாற்றிக்கொள்ள முடியவில்லை" என்று சொன்னான்.

சாந்தி "அரசரே! உங்கள் விருப்பத்தைத் தாராள மாகச் சொல்லுங்கள். கொடுக்கத்தக்கதாயின் சக்ரவர்த்தி நிச்சயமாய்க் கொடுப்பார்" என்றான். தாசமன்னவன் "பெருமையுள்ளவரே! என் பெண்வயிற்றுப் புத்திரன் தங்களுக்குப் பின்னர்ச் சந்திரவம்ச சிங்காதனத்துக்கு உரியவனாகவேண்டும். இதுதான் என்விருப்பம்" என்றான். அவ்வார்த்தை அரசன்காதில் பழுக்கக்காய்ச்சின இரும்

புச் சலாகை போலச் சென்று வருத்திற்று. சற்றுநேரம் வரையில் அவன் அறிவு நிலைகொள்ளவில்லை. அப்புறம் தான் நிதானத்துக்குவந்தது. அவன் தாசமன்னவனுக்கு, ஒன்றும் விடைசொல்லாமல் 'சாரதி! நல்லது; இரதத்தை விடு' என்று கட்டளையிட்டான். உண்மையை யுணர்ந்த அந்தப்பாகன் குதிரைகளை நடத்திக்கொண்டு பட்டணம் போய்ச்சேர்ந்தான். அரசனுக்குச் செம்படவப் பெண்ணின் எண்ணம் அதிகமாயிற்று. அஃது அவன் கருத்தை விட்டகலவில்லை. அவனுக்கு அவளையில்லாமல் உலகம் ருசிக்கவில்லை. அவன் சிலவருஷங்களுக்கு முன் கங்கையைப்பிரிந்து வருந்தியதுபோலவே அப்பொழுதும் அரண்மனையிலிருந்து வருந்தத்தொடங்கினான். ஆனால், அவ்வளவு வருத்தத்தை அநுபவிக்கும் காலத்திலும் அவன் மனம் வலைஞர்தலைவன் விரும்பும் வாத்தைக் கொடுக்கத் துணியவில்லை.

## அதிகாரம் 12

### மறுமணம்

"குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாதுங் கொடுத்துங் கொளல்." திருவள்ளுவர்.

சிலநாட்களாகச் சந்தனுமன்னவன் வெளியிற் புறப்படாமலும் எவருடனும் பேசாமலும் சிந்தனையில் மூழ்கியிருப்பது தேவவிரதனுக்குத் தெரிந்தது. அவன் ஒருநாள் ஏகாந்தத்தில் பிதாவை வணங்கித் "தந்தையே! இராஜ்யம் க்ஷேமமாக இருக்கின்றது. எல்லாவரசரும் தங்கள் கட்டளைக்கு அடங்கி வருகின்றனர். படைவீரர்கள் உற்சாகம் மிகுந்து விளங்குகிறார்கள். பொக்கிஷங்கள் யாவும் குறைவின்றி நிரம்பியிருக்கின்றன. அந்தணர்முதலியவர்

தத்தம் வருணத்துக்கும் நிலைக்கும் தக்க வொழுக்கங்களிற் றவறாது ஒழுகி வருகிறார்கள். நாட்டில் எங்கு நோக்கினும் தருமந் தழைத்துப் பொலிகின்றது. எனக்குத் தெரிந்தவரையில் உள்ளிலாயினும் வெளியிலாயினும் தங்கள் கட்டளையை அவமதிப்பவர் இருப்பதாகத் தெரியவில்லை. இவ்வளவிருந்தும் தாங்கள் மாத்திரம் இடைவிடாமல் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். என்னிடம் கூட விசேஷமாக ஒன்றும் பேசுவதில்லை. வாகனங்களிலேறி வெளியிற் செல்வதும் இல்லை. தங்கள் உடலின் நிறம் மாறி வெளுத்தும் இளைத்தும் வருகின்றது. இவற்றைக்கொண்டு யோசித்தால் தங்கள் மனத்தில் நீக்க முடியாத பெருங் கவலை ஒன்று இருந்துவரவேண்டும். தருமம் தெரிந்தவரே! தங்கள் வருத்தத்துக்கு நான் ஒருகால் காரணமாக இருப்பேனோவென்று என்மனம் இரவும் பகலும் எண்ணித் துன்புறுகின்றது. தங்கள் வருத்தத்தை எனக்குத் தெரிவியுங்கள். கூடுமானால் நான் அதனைப் பரிகரிக்க வழிதேடுகிறேன்" என்று சொன்னான்.

சந்தனுமன்னவனுக்குச் செம்படவப்பெண் காரணமாக வுண்டான தன்னெண்ணத்தைத் தேவவிரதனுக்குத் தெரிவிக்க முடியவில்லை. நேர்வழியில் நடப்புவனாதலால் தெரிவியாமலிருக்கவும் சரிப்படவில்லை. அவன் அதனை ஒரு விதமாகத் தீர்மானித்துக்கொண்டு "குழந்தாய்! என்னரசாட்சியினும் உன்னரசாட்சி ஆயிரம் மடங்கு சிறந்து விளங்குகின்றதென்பதை நான் அறியாதிருக்கவில்லை. வெளியில் நீ சொல்லியவனைத்தும் உண்மையானதுதான். சிலகாலமாக ஒரு பெருங்கவலையினால் நான் வருந்தி வருகிறேன். பராக்கிரம சிங்கமாகிய உன்னை நினைக்குந்தோறும் அஃது இன்னும் அதிகமாகின்றது. அஃதென்னவெனில், நமது பெரியகுலம் இப்பொழுது உன்னைச் சார்ந்

திருக்கிறது. இந்தக்குலத்துக்கு அஸ்திரப்பழக்கம் விடாதவனும் அதிசூரனுமான நீ யொருவன் தான் புத்திரனாக இருந்து வருகின்றனை. சந்ததி கெடாதிருப்பதற்கு ஆசைப்படுகிறேன். ஆனால், அதன்பொருட்டு நான் மறுபடியும் விவாகம் செய்துகொள்வதை விரும்பவில்லை. உனக்கு மங்களமுண்டாகட்டும்" என்று சொன்னான். குறிப்பறிவதில் சமர்த்தனான தேவவிரதனுக்குப் பிதாவின் எண்ணம் எளிதில் வெளியாயிற்று. அவன் உடனே விடைபெற்றுக்கொண்டு தந்தையைப் பிரியாதவனும், அவருக்குத் தேர்விடுகின்றவனும், சதுரனுமான அவர் சாரதியை வருவித்து வினவலும் அவன் பெரியவரசன் விருப்பத்தையும் அதற்குண்டான இடையூற்றையும் வெளிப்படுத்தினான்.

மறுநாள் தேவவிரதன் அறிவிலும் அநுபவத்திலுஞ் சிறந்த இரண்டொரு க்ஷத்திரிய வரசர்களுடன் யமுனைக் கரையின் சமீபத்திலுள்ள தாசமன்னவன் பட்டணமடைந்து அவன் செய்யும் உபசாரணைகளை அங்கீகரித்து அவன் கன்னிகையைத் தனது பிதாவுக்காகக் கேட்டான். அம்மன்னவன் கரங்களைக் குவித்துக்கொண்டு "இளவரசரே! நான் அதிகமாக என்ன சொல்லப் போகிறேன். என்பெண் இராஜ்யம் என்னும் பரிசத்துக்குக் கொடுக்கத் தக்கவள். அவள் வயிற்றிற் பிறக்கும் புத்திரன் சந்திரவம்ச பாரம்பரியமான சிங்காதனத்துக்குச் சொந்தமாக வேண்டும். இவ்விஷயத்தை ஏற்கெனவே தங்கள் தந்தையிடத்தில் தெரிவித்திருக்கிறேன். நான் என்ன செய்யட்டும். பெரிய சம்பந்தத்தை நினைந்து அவசியமும் உறுதியுமானவற்றை அநாதரவு செய்யமுடியவில்லை. தாங்கள் இளவரசர். சார்வபௌமசக்ரவர்த்திபதம் தங்களுக்குச் சொந்தமாயிருக்கின்றது. கன்னிகையைக் கொடா

திருப்பதற் குண்டான காரணத்தை இனித் தாங்கள் தெரிந்துகொள்ளலாமல்லவா ?" என்று சொன்னான்.

தேவவிரதன் "தாசமன்னவனே! உண்மையை ஒளியாமற் சொன்னதற்குச் சந்தோஷிக்கிறேன். என்வார்த்தையைக் கேள். என்போன்ற அரசகுமாரர்களில் எவரும் இப்படிச் சொல்லவே மாட்டார்கள். நான் உன் பெண் வயிற்றுப் புத்திரனைச் சந்திரவம்ச சிங்காதனத்துக்குச் சொந்தமாக்குகிறேன். இதுநிச்சயம்" என்று சொன்னான். செம்படவர்க்கரசன் மறுபடியும் வணங்கிப் "பாரதரே! சந்திரவம்ச சக்ரவர்த்திகள் உயிர் போவதாயினும் பொய் சொல்லத் துணியமாட்டார்கள். தந்தைக்குத் திருப்தி செய்வதன் பொருட்டுத் தங்களுக்குச் சொந்தமான பெரிய ராஜ்யத்தைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டீர்கள். பெண்வீட்டுக்காரரின் இயற்கைப்படி மறுபடியும் ஒன்று சொல்கிறேன். தங்கள் வசனத்தில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஆனால், தங்கள் சந்ததியின் விஷயத்தில் மாத்திரம் சந்தேகம் கொள்கிறேன்" என்று சொன்னான்.

தேவவிரதன் சற்று ஆலோசனைசெய்து "தாசராஜனே! இந்தச் சபையில் நான் சொல்லும் பிரதிக்ஞையைத் தெரிந்துகொள். எல்லாத் தேவர்களும் இதனைக் கேட்கட்டும். பிதாவுக்காக இராஜ்யம் முழுவதும் என்னால் கைவிடப்பட்டது. இப்பொழுது சந்ததிக்காகவும் பிரதிக்ஞை செய்கிறேன். நான் உலகத்தில் இருக்குந்தனையும் பிரமசாரியாகவே யிருப்பேன். மணம் செய்துகொள்ள மாட்டேன். மறந்தும் மாதரை விரும்பேன். புத்திரன் இல்லாமற் போயினும் புண்ணியலோகங்கள் எனக்குச் சொந்தமாகும். என்னுயிர் இவ்வுடலை ஒட்டியிருக்கும் வரையில் நான் புத்திரோற்பத்தி செய்யேன். அரசனே!

இனி உன் கன்னிகையை என்பிதாவுக்குக் கொடுக்கத் தடையில்லையல்லவா"? என்று சொன்னான். தேவவிரதனது அந்தச் சொல்லைக் கேட்டமாத்திரத்தில் தாசமன்னவனுக்கு மயிர்ச்சிலிர்ப்புண்டாயிற்று. அவன் பயத்தினால் நடுங்கிக்கொண்டு "தருமம் தெரிந்தவரே! கொடுத்துவிட்டேன்; இன்றுமுதல் சத்தியவதி தங்களுக்குச் சிற்றன்னையாயினள். தங்கள் சம்பந்தம் கிடைக்கத்தக்கதன்று. வளர்த்த வாஞ்சையை முன்னிட்டு இதுகாறும் சொல்லிய என்குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள்" என்று வணங்கினான்.

அப்பொழுது ஆகாயத்தில் 'எவரும் செய்யமுடியாத அதிபயங்கரமாகிய சபதம் செய்தபடியினால் இன்றுமுதல் இவனுக்குப் பீஷ்மன் என்று பெயர் வழங்கட்டும்' என்று ஒரு அசரீரி யுண்டாயிற்று. அதனை யநுசரித்து அந்தர வீதியில் அரம்பையர் நடனஞ் செய்தனர். கந்தருவர் கானம்பாடினர். தும்புருநாரதர் வீணை வாசித்தனர். மற்றத் தெய்வப்பெண்கள் பாரிஜாதம் முதலிய ஐந்தருமலர்களையும் அள்ளிச் சொரிந்தனர். அந்தர துந்துமி குமுகுமு வென்று குமுறியொலித்தது. பின்னர்த் தேவவிரதன் அங்கு நின்றுகொண்டிருந்த பரிமளகந்தியை நோக்கி "அன்னையே! தேரிலேறுங்கள். அரண்மனை செல்லலாம். அங்கு என்பிதா தங்கள் வருகையை எதிர் நோக்கியிருக்கிறார்" என்றான். சத்தியவதி மறுமொழி சொல்லாமல் உடனே சந்தோஷமாகத் தேரிலேறினாள்.

தேவவிரதன் தானே சாரதியாகநின்று தேரை நடத்திக்கொண்டு அத்தினபுரம்வந்து அரசனைப்பணிந்து 'தந்தையே! இதோ என் சிற்றன்னையை அழைத்துவந்திருக்கிறேன். அங்கீகரியுங்கள்' என்று சொன்னான். அதற்குள் தாசராஜன் சத்தியவதிக்குத் தாத்தக்க ஸ்ரீதனப்

பொருள்களை எடுத்துவந்து அரசனைப்பணிந்து இளவரசன் சபதத்தையும் அதனைத் தேவர்கள் அங்கீகரித்த விதத்தையும் தெரியப்படுத்தித் தன்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டான்.

சந்தனு தேவவிரதனைத் தழுவிக்கொண்டு "குழந்தாய்! காமாதுரனாகிய என்பொருட்டு நீ முதலில் அரசைத் துறந்தனை. அப்புறம் மணத்தை வெறுத்தனை. மனிதவுலகத்தில் ஒருவகைச் சுகமும் இல்லாமல் உன்னை முற்றிலும் கெடுத்துக்கொண்டனை. உலகத்தில் ஒருபுத்திரன் தன் தந்தைக்குச் செய்யவேண்டிய கடமைகளில் நீ எனக்கு ஆயிரத்துக்கும் அதிகமாகச் செய்துவிட்டனை. நமது மூதாதைகளில் ஒருவரான பூருவென்பவர் தந்தைக்குத் தமது இளமையைக் கொடுத்து அவர் கிழத்தனத்தையும் க்ஷயரோகத்தையும் பெற்றுக்கொண்டு மிக நீண்டகாலம் வரையில் வருந்தினரென்று கேள்வியுற்றிருக்கிறேன். ஆனால், அதற்குப் பிரதிபலனாக அவருக்குச் சந்திர வம்ச சிங்காசனம் சொந்தமாயிற்று. முதற் புத்திரர்களுக்கு அந்த வுரிமை கிடைக்கவில்லை. நாம் அனைவரும் பூருவின் சந்ததிகள் தாம். அந்தப் பூரு சிங்காசனத்தை விரும்பி அளித்திருக்கலாமென்று ஒருகால் சொல்லவும் இடமுண்டு.

"நீ இப்பொழுது எனக்குச்செய்த உதவியைப்போல உலகத்தில் ஒருவரும் செய்திரார். இம்மை மறுமை இரண்டிடத்திலும் நீ பயனை விரும்பாமல் எனக்கு உதவியிருக்கின்றனை. நீயோ குலத்துக்குத் தலைவன். அதனுடன் பரிசுத்தமான கங்கையின் வயிற்றிற் பிறந்தவன். சகல கலைகளும் தெரிந்தவன். சூரன். இவ்வுலகத்தில் பிறப்பிலாவது, படிப்பிலாவது, ஒழுக்கத்திலாவது, பராக்கிரமத்திலாவது உனக்கு ஒப்பாகின்றவர் இலர். தீந்தை

மகனுக்குச் செய்யவேண்டிய கடமைகளில் ஒன்றையாவது நான் உனக்குச் செய்யவில்லை. எல்லாவற்றையும் அன்னையே உனக்குச் செய்து முடித்துவிட்டனள். ஒரு சமயம் நான் செய்திருந்தாலுங் கூட அப்படிச் செய்திருக்க மாட்டேன். இனி உனக்கு நான் என்ன செய்யப்போகிறேன். என் வார்த்தைக் கேள். எல்லாப் புண்ணிய வுலகங்களும் உனக்குச் சொந்தமாகட்டும். நீ விரும்பும் சமயத்தில் உனக்கு மரணமுண்டாகட்டும். யமன் வந்து உன்னை வலுவில் அழைத்துச், செல்லாதொழிக" என்று சொன்னான். அப்பொழுது அந்தரத்திலிருந்து மலர் மாரி சொரிந்தது. தேவர்கள் ஆசி வழங்கினார்கள்.

பின்னர்ப் பரிமளகந்தி எந்த மணத்துக்குத் தகுந்தவள் என்று ஆலோசனை நடந்தது. அப்பொழுது தாசமன்னவன் கரத்தைக் குவித்துக்கொண்டு "அரசர் தலைவரே! சத்தியவதியைப் பற்றிய ஒரு இரகசியத்தை இப்பொழுது தெரிவிக்க விரும்புகிறேன். அதனைத் தாங்களும் இங்குள்ள மற்றவர்களும் அவசியம் கேட்கவேண்டும். ஜகதிலகமென்று புலவர் புகழும் சேதிநாட்டில் இருந்த உபரிசரவசு மகாராஜாவை அனைவரும் கேள்வியுற்றிருக்கலாம். இந்திரன் அவருக்கு நண்பனாகித் தெய்வ விமானத்தையும் வைஜயந்தி மாலையையும் அளித்துக் கௌரவித்ததும் உலகம் அறியாததன்று. அம்மன்னவர் மனிதராக விருந்தும் தெய்வ சுகம் எல்லாவற்றையும் அநுபவித்திருக்கிறார். அவர் மனைவிக்குக் கிரிகையென்று பெயர். அவர் ஒரு சமயத்தில் வேட்டையினிமித்தம் காட்டுக்குப் போனார்.

அங்கு நன்றாய்ப் பூத்த ஒரு அசோக மரத்தின் கீழ் அவர் இளைப்பாறுகையில் மனைவியின் நினைவு வளர்ந்து வீரியம் வெளியாயிற்று. தருமம் தெரிந்தவராதலால் அத

னைக் கிரிகையினிடம் சேர்க்கும்படி தன்னிடமிருந்த ஒரு புறாவினிடத்தில் கொடுத்தனுப்பினார். அப்பறவை அதனை எடுத்துச் செல்கையில் நடுவழியில் வேறொரு பறவை அதனோடு சண்டை செய்ய வந்தது. அப்போரில் அதனிடமிருந்த வீரியம் இரண்டாகப்பிரிந்து யமுனையாற்றில் விழ, அதனை ஒரு மீன் உணவென்று பருகிக் கருத்தரித்தது. செம்படவர் வலையில் ஒரு நாள் அம்மீன் அகப்படலும் அதன் வயிற்றில் எவரும் கண்டு அதிசயிக்கும் வண்ணம் ஆண் குழந்தை யொன்றும் பெண் குழந்தை யொன்றும் இருந்தன. அவர்கள் அவ்விரண்டு குழந்தைகளையும் என்னிடம் ஒப்புவித்தனர். நான் ஒரு அப்சரமடந்தையினால் அவற்றின் வரலாற்றை யறிந்து உபரிசரவசு மன்னவரிடத்தில் குழந்தைகளை ஒப்புவித்தேன். அவர் ஆண் குழந்தையைத் தாம் எடுத்துக்கொண்டு பெண் குழந்தையை எனக்குக் கொடுத்தனர். நான் அதனை மச்சியகந்தி யென்று பெயரிட்டு வளர்த்து வந்தேன். அவள் தான் இவள்.

இளம்பருவத்தில் இவளுடம்பில் மீன் நாற்றம் துர்க்கந்தமாக வீசிக்கொண்டிருந்தது. அதனை நீக்கப் பல வகையில் முயன்றும் பயன் பெறவில்லை. பின்னர் ஒரு பெரியவர் கட்டளையின் வண்ணம் இவளை யமுனையாற்றில் முனிவர்களுக்கு ஓடம்விடப் பணித்தேன். சில வருஷங்களில் இவளுடம்பிலிருந்த மீன் நாற்றம் முற்றிலும் மறைந்து அதற்குப் பதிலாகப் பதின்மடங்கு அதிகமான பரிமளகந்தம் வீசத் தலைப்பட்டது. அன்றுமுதல் இவள் பரிமளகந்தி அல்லது யோசனைக்கந்தி என்று பெயர் பெற்றனள். எப்பொழுதும் உண்மையே உரைப்பவளாதலால் சத்தியவதியென்றும் அழைக்கப் படுகின்ற

னள். இஃது இவள் வரலாறு. இனி இவள் குலத்துக்கும் தங்கள் கௌரவத்துக்கும் தக்கபடி விவாகம் நடத்திக் கொள்ளுங்கள்" என்று சொன்னான்.

அதனைக்கேட்டு அனைவரும் ஆச்சரிய மெய்தினர். அப்புறம் அந்தணர்கள்வந்து நன்முகூர்த்தத்தில் மறையொழுங்கின் வண்ணம் மணச்சடங்கை நிறைவேற்றினார்கள். சந்தனுமன்னவன் பரிமளகந்தியைவிட்டு அரைக்கணமும் பிரியாமல் இருந்து இல்லறம் நடத்தி வந்தான்.

> "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு." திருவள்ளுவர்.

அவனுக்கு அடுத்த இரண்டு வருஷத்துக்குள் அழகின் கனிகள் என்னத்தக்க சித்திராங்கதன் விசித்திரவீரியன் என்று இரண்டு புத்திரர் பிறந்தனர். பீஷ்மன் நடத்தும் அரசநீதியாலும், பரிமளகந்தியின் பணிவிடைகளாலும், இளஞ்சிறுவரின் விநோத விளையாட்டுக்களாலும் சந்தனுமன்னவன் சுவர்க்கத்தில் வசிக்கும் இந்திரனைப்போல நெடுங்காலம் வரையில் சந்தோஷ சுகத்தை அநுபவித்து வந்தான்.

முற்றிற்று.



# நளவெண்பாச் சுருக்கம்

## சுயம்வரகாண்டம்

### நிடதநாட்டுச் சிறப்பு

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலும் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

### அரசன் பெருமை

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாரும் செல்வப் பெடைவண்டோ—டூடா
முருகுடைய மாதர் முகநோக்கும் தண்டார்
அருகுடையான் வெண்குடையான் ஆங்கு. 2

### இராஜ நீதி

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு. 3

### அரசன் சோலைக்குச் செல்லுதல்

வாங்குவளைக் கையார் வதனமதி பூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்-தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக. 4

### அன்னத்தின் வரவு

நீணிறத்தால் சோலை நிறம்பெயர நீடியதன்
தாணிறத்தால் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே யாங்கு. 5

### அன்னத்தின் துயரம்

அன்னம் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம்
புலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு. 6

### அரசன் அபயமளித்தல்

அஞ்சல் மடவனமே உன்றன் அணிநடையும்
வஞ்சி யனையார் மடநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண் என்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன். 7

### அன்னம் தமயந்தியைப் புகழ்தல்

நாற்குணமும் நாற்படையா வைம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதனமதிக் குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு. 8

### அன்னம் நளனுக்குத் தமயந்தியைக் கூட்டுவிப்பேனெனல்

வீமன் திருமடந்தை மென்மாலை உன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையாய் என்றுரைத்து நீங்கியதே அன்னம்
ஒடுங்கிடையாள் தன்பால் உயர்ந்து. 9

### அன்னம் தமயந்தியை அடைதல்

மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய—நன்னுதலும்
தன்னுடல் விட்டுத் தனியிடம்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்றாள் ஈங்கு. 10

### அன்னம் நளனைப் புகழ்தல்

செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்தன் உனக்கு. 11

### தமயந்தியின் விடை

வாவி யுறையும் மடவனமே என்னுடைய
ஆவி யுவந்தளித்தாய் ஆதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்றுரைத்தாள் 12
பார்வேந்தன் பாவை பதைத்து.

### சுயம்வர விளம்பரம்

மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தல்மேற் கங்கைக் கொழுந்தோடும் நன்னாடன் 13
வேந்தர்மேல் தூதோட விட்டு.

### அரசர் வரவு

புள்ளுறையும் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமும் இனிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்தன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. 14

### நளன் எழுச்சி

சடைச்செந்நெல் பொன்விளைக்கும் தன்னாடு பின்னாகக்
கடற்றானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொன்றாம வீமன் திருமகளாம்
நல்லுயிரும் வாழும் நகர். 15

### தமயந்தி சுயம்வரமண்டபம் அடைதல்

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. 16

### தமயந்தி நளனுக்கு மாலையிடல்

விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். 17

திருமணம்

கணிமொழிந்த நாளிற் கடிமணமும் செய்தார்
அணிமொழிக்கும் அண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றேவ ரொவ்வார் மகிழ்ந்து. 18

---

## கலிதொடர்காண்டம்

நள தமயந்திகளின் இல்லறம்

பொய்கையும் வாசப் பொழிலும் எழிலருவிச்
செய்குன் றும் ஆறும் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழித்தான் அடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானைக் கோ. 19

கலிபுருஷன் நளனை அடைதல்

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயாம் சேர்ந்தாற்போல்—பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறிக்
கற்றவனைச் சேர்ந்தான் கலி. 20

புஷ்கரன் சூதாடவரல்

புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்கும்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
கல்லேய்க்கும் நாடன் கவறுடப் போயினான்
கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு. 21

நளன் சூதுக் கிசைதல்

என்றோம் இதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேறல்-தான்தேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கும் நன்னாடன்
சூதாட வென்றான் துணிந்து. 22

மந்திரிகள் மறுத்தல்

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்தல் இவைகண்டாய்—போதில்
சினையாமை வைகும் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி. 23

### நளன் மறுமொழி

தீது வருக நலம்வருக சிந்தையால்
சூது பொரவிசைந்து சொல்லினோம்—யாதும்
விலக்கலிர்நீ ரென்றான் வராலேற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று. 24

### நளன் சூதில் யாவற்றையும் தோற்றல்

சாதுரங்கம் வென்றேன் தரும்பணயம் ஏதென்ன
மாதுரங்கம் பூணும் மணித்தேரான்—சூதரங்கில்
பாவையரைச் செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப் பின்னுகுழற்
பூவையரைத் தோற்றான் பொருது. 25

### நளன் மக்களை விதர்ப்பத்துக்கனுப்பி மனைவியோடும் வனம்புகல்

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகம் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து. 26

### புஷ்கரன் பறை யறைவித்தல்

வண்டாடும் தார்நளனை மாநகரில் யாரேனும்
கொண்டாடி னார்தம்மைக் கொல்வமெனத்—தண்டா
முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசறியா வேந்தன் அழன்று. 27

### வனத்தில் கலிபுருஷன் பறவையாக வரல்

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெறிக்கே
அஞ்சிப்பா ரீந்த வரசனையும் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து. 28

### நளன் பறவைவேட்டையில் உடையிழத்தல்

காவிபோற் கண்ணிக்கும் கன்னியந்தோட் காளைக்கும்
ஆவிபோல் ஆடையுமொன் றானதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலும் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை ஆதரித்த போது.

நளனும் தமயந்தியும் பாழ்மண்டபம் அடைதல்

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிப்போய்
வெங்கா னகம்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபம்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபம்கண்டான் வந்து. 30

நளன் தமயந்தியைப் பிரிய நினைத்தல்

காரிகைதன் வெந்துயரம் காணாமல் நீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தான் ஆங்கு. 31

நளன் தமயந்தியின் ஆடையை அறுத்தல்

ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றும்தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான் அரிந்திட் டவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து. 32

நளன் கடவுளை வேண்டிச் செல்லல்

தீக்கா னகத்துறையும் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான். 33

தமயந்தி விழித்துப் புலம்பல்

வெறித்த இளமான்காள் மென்மயில்காள் இந்த
நெறிக்கண் நெடிதூழி வாழ்வீர்—பிரித்தெம்மைப்
போனானைக் காட்டுதிரோ வென்னாப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான். 34

வணிகர்தலைவன் தமயந்தியைக் காணல்

அவ்வளவி லாதிப் பெருவழியில் ஆய்வணிகன்
இவ்வளவுத் தீவினையேன் என்பாள்தன்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய தெல்லாம் உணர்ந்து. 53

அவன் தமயந்தியைச் சேதிநகரத்தில் விடல்

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டுப்
போதிற் கொடைவணிகன் போயினான்—நீதி
கிடத்துவான் மன்னவர்தம் கீர்த்தியினைப் பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து. 36

பணிப்பெண்கள் அரசன்மனைவிக்குத் தமயந்தியின் வரவு அறிவுறுத்தல்

அற்ற துகிலும் அருதொழுகு கண்ணீரும்
உற்ற துயரும் உடையளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டேம் நிலவேந்தன் பொற்றேவி
யென்றார் மடவார் எடுத்து. 37

அரசன் மனைவி தமயந்தியைத் தன்னுடன் இருக்கச்சொல்லல்

உன்தலைவன் தன்னை ஒருவகையால் நாடியே
தந்து விடுமளவும் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே யிருக்க இனிதென்றாள் ஏந்திழையைக்
கொங்கேயும் தாராள் குறித்து. 38

சேதியரசன் தமயந்தியை அவள் தந்தையிடம் அனுப்பல்

தந்தனையும் கன்னியையும் கண்டா யினும்சிறிது
தன்துயரந் தீர்ந்து தனியாறத்—தந்தை
பதியிலே போக்கினான் சேதிபர்கோன் பண்டை
விதியிலே போந்தானை மீண்டு. 39

---

கலிநீங்குகாண்டம்

நளன் வேற்றுருக்கொண்டு அயோத்தி யடைதல்

முந்நீர் மடவார் முறுவல் திரள்குவிப்ப
நன்னீர் அயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்கும் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கும் நன்னாட் டரசு. 40

தமயந்தி நளனைத் தேடும்பொருட்டுச் சுதேவனிடம் செய்தி சொல்லி யனுப்பல்

காரிருளில் பாழ்மண் டபத்தேதம் காதலியைச்
சோர்துயிலில் நீத்தல் துணிவன்றோ—தேர்வேந்தர்க்
கென்றுறைந்தால் நேர்நின் றெதிர்மாற்றம் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து. 41

சுதேவன் அயோத்தியரசன் சபையில் தமயந்தி கற்பித்ததைக் கூறல்

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதுவும் வேந்தர்க்குப் போதுமோ-தானென்று
சாற்றினான் அந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தான் எதிர். 42

வேற்றுருக்கொண்ட நளன் அதற்கு விடை பகர்தல்

ஒண்டொடி தன்னை உறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டாளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறேல் நீ. 43

சுதேவன் விதர்ப்பம் அடைதல்

அம்மொழிகேட் டந்தணனும் ஐயுற் றுருநோக்கி
விம்மு கருங்குழலை மீண்டடைந்தான்—தெம்மன்னர்
ஊன்தோய் வடிவேல் விதர்ப்பன்தன் ஒண்ணகர்க்கே
வான்தோய்பொன் கோயிலிடை வந்து. 44

தமயந்தி சுதேவனை இரண்டாமுறை அயோத்திக் கனுப்பல்

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரத் தேர்க்கோலம் கொள்வான்
படைவேந்தன் என்றாள் பரிந்து. 45

சுதேவன் அயோத்தியாசனைக் கண்டு தமயந்திக்கு
இரண்டாவது சுயம்வரம் எனல்

எங்கோன் மகளுக் கிரண்டாம் சுயம்வரமென்
றங்கோர் முரசம் அறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளும் நாளை அளவென்றான் அந்தணன்போய்த்
தென்னாளும் தாரானைச் சேர்ந்து. 46

இருதுபர்ணன் வேற்றுருக்கொண்ட நளனுடன் ஆலோசித்தல்

வேதமொழி வாணன் மீண்டும் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்—றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்றான் இகல்சீறும்
மின்செய்த வேலான் விரைந்து. 47

நளன் வருந்தல்

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை உலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது. 48

நளன் இருதுபர்ணனுக்குத் தேர்விடல்

முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்
தார்குன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்றான் ஊர்கின்ற தேர். 49

நளனும் இருதுபர்ணனும் விதர்ப்பம் அடைதல்

ஆமை முதுகில் அலவன் துயில்கொள்ளும்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்தன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்
அன்னகரி யொன்றுடையான் ஆங்கு. 50

நளன் இருதுபர்ணனுக்குச் சமையல்வேலை செய்தல்

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதில் அடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயில் கார்நீலம் கண்விழிக்கும் நாடன்
மடைவாயில் புக்கான் மதித்து. 51

தமயந்தி வேற்றுருக்கொண்ட நளனைத் தந்தைக்குத் தெரிவித்தல்

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேரும் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்காண் எங்கள்
கொடைத்தொழிலான் என்றாள் குறித்து. 52

தமயந்தி நளனை உண்மையுருக் காட்டச் சொல்லல்

ஐந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை ஐயுற்று—மந்தி
தெளியா திருக்கும் திருநாடா வுன்னை
ஒளியாது காட்டுன் னுரு. 53

நளன் உண்மைவடிவம் கொள்ளல்

மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோர் அருவினைபோற் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு. 54

கலிபுருஷன் வரந்தந்து போதல்

என்காலத் துன்சரிதம் கேட்டாரை யானடையேன்
மின்கால் அயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்கும் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி. 55

நளன் புஷ்கரனுடன் மறுசூதாடச் செல்லல்

வில்தானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேல் தேவியொடும் போயினான்—முற்றும்பல்
தேனீர் அளித்தருகு செந்நெல் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன். 56

நளன் புஷ்கரனுக்குச் செய்தியனுப்பல்

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணயம் உளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீர் என்று தூதரை விடுத்தான்
தண்தெரியல் தேர்வேந்தன் தான். 57

நளன் சூதாட்டத்தில் யாவற்றையும் ஜயித்தல்.

அப்பல்கை யொன்றின் அருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநக்கரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து. 58

நளன் அனைவரும் சூழ நகரமடைதல்

ஏனை முடிவேந்தர் எத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகரம் எய்துழ் புரந்தரனைப் போல்பொலிந்து
நன்னகரம் புக்கான் நளன். 59

நள தமயந்திகளைக் கண்டு ஜனங்கள் சந்தோஷித்தல்

சீர்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்பன் எதிர். 60







P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS